# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

(மாதப் பத்திரிகை)

இந்தப் பத்திரிகைக்கு ஏஜெண்டுகள் நியமிக்கப்படாத ஊர்களுக்கு ஏஜெண்டுகள் தேவை. முன்பணம் கட்டக்கூடிய பத்திரிகை விற்பனையாளர்கள் தொடர்பு கொள்ளவும்.

## சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 15 |
| ஆயுள் சந்தா | ரூ. 180 |
| தனிப் பிரதி | ரூ. 1-50 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.


தொலைபேசி :
71231



விவரங்களுக்கு:

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

## தீபாவளிச் சிறப்பிதழ்—வாழ்த்து



அன்புடைப் பெரியீர்,

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது.

அன்பார்ந்த வணக்கம்.

ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தின் நவம்பர் இதழ் தீபாவளிச் சிறப்பிதழாக வெளிவர இருக்கிறது. சிறப்பிதழ் என்பதற்கேற்ப, சிறப்பு அம்சங்கள் இந்த இதழில் இடம் பெறும். ஆனால் விலையிலோ பக்கங்களிலோ மாற்றம் இராது.

அன்பர்கள் தத்தம் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் தீபாவளியின் போது தீபாவளி வாழ்த்து அனுப்புவார்கள். அவ்விதம் செய்வதோடுகூட ரூ. 15 செலுத்தி, தீபாவளி முதல் அவர்களுக்கு நீங்கள் விஜயம் பத்திரிகையையும் தீபாவளி வாழ்த்தாக அனுப்பலாமே.

இந்த யோசனையைச் சந்தாதாரர்கள் ஏற்றுச் செயற்படுத்துவார்கள் என்று உறுதியாக நம்புகிறோம்.

விஜயம் தீபாவளிச் சிறப்பிதழை 2000 பிரதிகள் கூடுதலாக அச்சிடுகிறோம்.

இந்தக் கூடுதல் 2000 பிரதிகளையும் ஒரு புது மாதிரியான தீபாவளி வாழ்த்தாகப் பயன்படுத்திக்கொள்ளும்படி விஜயம் வாசகர்களை அன்புடன் கேட்டுக்கொள்கிறது.

—ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

## சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 1,10,001 முதல் 1,10,745 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை அக்டோபர் மாதத்துடன் முடிவடைகிறது. பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 15ஐ அக்டோபர் 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

* சந்தா எண் 1,20,001 முதல் 1,20,385 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை நவம்பர் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 1,30,001 முதல் 1,31,169 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை டிசம்பர் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 20,001 முதல் 20,458 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஜனவரி மாதத்துடன் முடிவடைகிறது.

சந்தாவைக் கூடிய விரைவில் முன்னதாகவே செலுத்துவதனால் பல சங்கடங்களையும் குழப்பங்களையும் தவிர்க்க முடிகிறது.

நிர்வாகி,
ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 63 | அக்டோபர்—1983 ருதிரோத்காரி ஹு ஐப்பசி மீ | இதழ் 10

## பொருளடக்கம்



ஆயுள் சந்தாதாரராகச் சேருவதன் மூலம் **ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்** பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவுங்கள்.

## ஆதரவு தாரீர்!

அன்புள்ளம் கொண்ட வாசகருக்கு,

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. வணக்கம். ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகையைப் பலரும் படித்துப் பயன்பெறச் செய்வது ஒரு நல்ல தெய்விகத் தொண்டாகும்.

உங்கள் ஊரிலுள்ள உயர்நிலைப் பள்ளிகளுக்கு, நீங்கள் படித்த உயர்நிலைப் பள்ளிக்கு, உங்கள் ஊரிலுள்ள பொதுநூலகத்திற்கு ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் அனுப்புவதற்குத் தாங்கள் சந்தா செலுத்தலாம். தங்கள் நன்கொடையாக அமையும் அதன்மூலம் பலரும் விஜயத்தைப் படிக்கும் வாய்ப்பு ஏற்படும்.

விருப்பமுள்ள அன்பர்கள், சத்சங்கங்களுக்கும் பொது நூலகங்களுக்கும் விஜயம் பத்திரிகையை அனுப்புவதற்குத் தாங்களே பணம் செலுத்தலாம். உதாரணமாக, ஒருவர் ரூ. 150 அனுப்பினால் 10 சத்சங்கங்களுக்கு ஒரு வருடத்திற்கு விஜயம் அனுப்பப்படும். அவ்விதம் பத்திரிகை அனுப்பப்படும் சத்சங்கங்களின் முகவரிகள் பணம் அனுப்பியவருக்குத் தெரிவிக்கப்படும். அல்லது தாங்களே பத்திரிகை அனுப்ப வேண்டிய முகவரிகளைக் குறிப்பிட்டும் பணம் அனுப்பலாம்.

—ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

---

## உங்களிடமிருந்து வரவேற்கிறோம்

நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள், மகான்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள், பொன்மொழிகள், ஆன்மிக வினா, (கவிதைகள் அனுப்ப வேண்டாம்), கோவில் போன்ற புகைப்படங்கள் முதலிய எதையும் தபால் மூலம் அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு.

எழுத்தாளர் தமது எழுத்தோவியம் எதுவாயினும் அதன் நகல் ஒன்றைத் தம்மிடம் வைத்துக்கொண்டு பின்னர் விஜயத்திற்கு அனுப்பக் கோருகிறோம்.

**மக்களுக்குப் பயன்படுவதாகவும், சுருக்கமாகவும், கருத்தாழம் கொண்டதாகவும் எழுத்தோவியம் அமைவது முற்றிலும் அவசியம்.** காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும், வரிக்கு வரி நிறைய இடம் விட்டு, எளிய தமிழ்நடையில் தெளிவாக எழுத வேண்டும்.

பத்திரிகையில் வெளியிடப்படுவதாக இருந்தால் அனுப்பியவருக்கு ஒரு வார காலத்திற்குள்ளாக ஆசிரியர் சார்பாகப் பதில் கிடைத்துவிடும்.

பிரசுரிக்கத் தேர்ந்தெடுக்கப்படாத கதை, கட்டுரை முதலியவற்றைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலைகள் இணைத்திருக்க வேண்டும். தபால் தலை வைத்திராத கதை, கட்டுரைகள் முதலியவற்றைத் திருப்பி அனுப்புவதற்கில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஆசிரியர்,
ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை. —திருமூலர்

## பிரார்த்தனை



गिरामाहुर्देवीं द्रुहिणगृहिणीमागमविदो
हरेः पत्नीं पद्मां हरसहचरीमद्रितनयाम् ।
तुरीया कापि त्वं दुरधिगमनिस्सीममहिमा
महामाया विश्वं भ्रमयसि परब्रह्ममहिषि ॥



கிராமாஹுர் தேவீம் த்ருஹிணக்ருஹிணீ-மாகமவிதோ
ஹரே: பத்நீம் பத்மாம் ஹரஸஹசரீ-மத்ரிதநயாம் ।
துரீயா காபி த்வம் துரதிகம-நிஸ்ஸீம-மஹிமா
மஹாமாயா விச்வம் ப்ரமயஸி பரப்ரஹ்ம-மஹிஷி ॥

—ஸௌந்தர்யலஹரீ

பரப்பிரம்மத்துடன் இணைந்த பராசக்தியே! வேதத்தை அறிந்தவர்கள் உன்னையே பிரம்மாவின் பத்தினியான வாக்தேவதையாகவும் (சரஸ்வதியாகவும்), ஹரியின் பத்தினியான திருமகளாகவும், சிவனுடைய பத்தினியான பார்வதியாகவும் கூறுகிறார்கள். நீயே இந்த மூவருக்கும் அப்பாற்பட்டவளாக, 'இத்தகையவள்' என்று சொல்ல முடியாதவளாக, அடைவதற்கு அரியதும் எல்லை இல்லாததுமான மகிமை உடையவளாக, மகாமாயை எனப்பட்டவளாக, உலகு அனைத்தையும் ஆட்டி வைக்கிறாய்.

அன்னையே போற்றி போற்றி அடியரைக் காக்க வேண்டும்
என்னுடை இதயந்தன்னில் எழிலொடு வாழ வேண்டும்
பொன்னகைச் சிவனார்கூடப் பொலிவொடு வரவே வேண்டும்
கன்னலைக் கையிலேந்தும் கற்பகம் வரவே வேண்டும்.

—ஸ்ரீதேவி நவராத்திரி கவசம்

# நான் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர்

ஸ்ரீராமகிருஷ்ணர் பெண்ணை வணங்கினர் என்பதற்குக் காரணம் அவர் பார்த்த ஒவ்வொரு பெண்ணின் முகத்திலும் பராசக்தியான அம்பிகையின் முகமே அவருக்குப் பிரதிபலித்தது என்பதுதான். ஜகன்மாதாவைத் தவிர வேறொன்றையும் அவர் அங்கே பார்த்ததில்லை. சமுதாயமே வெறுத்து ஒதுக்கத்தக்க விலைமகளின் பாதங்களில் இவர் விழ்ந்து, கண்களிலிருந்து நீரை ஆறுகப் பெருக்கி, ''தாயே பராசக்தி! இந்த ஓர் உருவத்தில் விலைமகளாக நீ வீதியிலே நிற்கிருய்; மற்றோர் உருவத்தில் இந்தப் பிரபஞ்சமாகக் காட்சியளிக்கிருய்! அகிலாண்ட கோடி ஈன்ற அன்னையே, உனக்கு அனந்த கோடி நமஸ்காரம்'' என்று சொல்லி வணங்கிய காட்சியை நானே நேரில் பார்த்திருக்கிறேன்.



மருவு பெண்ணாசை முற்றிலும் மறைந்து போன அவரது பரிசுத்த, பரமானந்த வாழ்க்கையைப்பற்றிச் சற்றுச் சிந்தித்துப் பாருங்கள்! அகிலாண்டத்தையும் படைத்துக் காத்துப் பரிபாலிக்கும் அந்த ஆனந்த சொரூபிணி அம்பிகையின் முகத்தின் ஜோதியே ஒவ்வொரு பெண்ணின் முகத்திலும் ஒளிவிடுவதைக் காணும் வகையில் மாற்றம் பெற்ற அவரது மாசற்ற மனநிலையைச் சற்றுச் சிந்தித்துப் பாருங்கள்.

மற்றவர் தமக்கு மரியாதை காட்ட வேண்டுமா வேண்டாமா என்ற சிந்தனை எதுவுமின்றி, அவர் எளிமையாக இருந்தார்; தாம் ஒரு சிறந்த ஆசாரியர் என்ற எண்ணம் அவருக்குச் சிறிதுமே இருந்ததில்லை. பராசக்தியே அனைத்தையும் செய்து வருகிருள், தானல்ல என்ற எண்ணம் அவரிடம் முழு அளவில் இருந்தது. ''என் வாயிலிருந்து ஏதாவது நல்ல சொல் வெளிவந்திருந்தால் அது அம்பிகையினுடையதே. அம்பிகையே பேசுகிருள். அந்தச் சொல் என்னுடையது என்று எப்படி நான் உரிமை பாராட்ட முடியும்?''—இதுவே தாம் செய்யும் காரியங்கள் பற்றிய அவரது கருத்தாக இருந்தது. ஜகன்மாதாவே அனைத்தையும் செய்கிருள் என்ற இந்த எண்ணம் அவரது ஆயுளின் இறுதிநாள் வரை இருந்தது. அம்பிகையைத் தவிர வேறு எவருடைய உதவியையும் அவர் நாடியதில்லை.

மக்கள் அந்த அற்புத மனிதரைக் காண, அவரது சொற்களைக் கேட்க, ஆயிரக் கணக்கில் திரண்டு வந்தனர். அவர் அனைவருடனும் கிராமத்து மொழியில் பேசினர். ஆனல் அவரது ஒவ்வொரு சொல்லும் ஆற்றல் மிக்கதாகவும், உள்ளத்திற்கு ஒளியூட்டக் கூடியதாகவும் இருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு குழந்தையைப் போன்ற தூய்மையை உடையவர். அவர் தமது வாழ்க்கையில் பணத்தைத் தீண்டியவரல்லர். காமம் என்பது அவரை விட்டு முற்றும் அகன்றே போய்விட்டது.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரில், மனிதன் என்பவன் மறைந்தே போய் விட்டான்; அவரில் குடிகொண்டிருந்தவன் இறைவனே. அவரால் பாவத்தைப் பார்க்கவே முடியாது. அநீதியையோ அக்கிரமத்தையோ பார்க்க முடியாத அளவிற்கு அவரது கண்கள் தூய்மை பெற்றிருந்தன. இத்தகைய ஒருசில பரமஹம்சர்களின் (துறவிகளில் மேல்நிலையில் இருப்பவர்கள்) தூய்மைதான் இன்று இந்த உலகத்தை நிலைபெற்றிருக்கச் செய்திருக்கிறது. இத்தகைய மேலோர் அனைவரும் இதைவிட்டு மறைந்து போய்விடுவார்களாகில் இந்த உலகம் சிதறிப் போய்விடும். ஆம், இந்தப் புண்ணிய புருஷர்கள் இருப்பதனால்தான் இந்தப் பூவுலகம் வாழ்கிறது.



ஸ்ரீராமகிருஷ்ணர் என்மீது பெரிதும் அன்பு கொண்டிருந்தார். அவர் என்னிடம் செலுத்தியது போன்ற பேரன்பை என் பெற்றோர்கூட என்னிடம் காட்டியதில்லை. நான் சொல்லும் இவற்றையெல்லாம் ஏதோ கவிதை என்றோ, கற்பனை என்றோ, மிகைபடக் கூறியவை என்றோ ஒருவரும் கருதிவிட வேண்டாம். இவை அனைத்தும் முற்றும் உண்மை. அவருடைய ஒவ்வொரு சீடரும் இதை நன்கு அறிவர்.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் உலக நன்மைக்காகவே தோன்றியவர். அவரை நீங்கள் மாமனிதர் என்றோ, கடவுள் என்றோ, ஓர் அவதார புருஷர் என்றோ உங்கள் விருப்பம் போல் அமைத்துக் கொள்ளுங்கள். உங்கள் அறிவுக்கு எவ்விதம் தோன்றுகிறதோ அவ்விதமே அவரை உங்களில் ஒவ்வொருவரும் ஏற்றுக்கொள்ளுங்கள்.

ஆனால் ஒன்றுமட்டும் உண்மை—எவர் ஒருவர் அவர்முன் தலைவணங்குகிறாரோ அவர் அந்த நொடியிலேயே பத்தரைமாற்றுப் பசும் பொன்னாக மாற்றப்பட்டுவிடுகிறார். ராமகிருஷ்ண அவதாரம் என்றைய தினம் ஏற்பட்டதோ அன்றைய தினமே சத்திய யுகம் (பொற்காலம்) பிறந்துவிட்டது. இந்த அவதாரத்தில் நாஸ்திகக் கொள்கைகள் ஞானவாளால் வெட்டி வீழ்த்தப்பட்டுவிடும். இந்த உலகம் முழுவதும் பக்தியினாலும் பிரேமையினாலும் ஒன்றாக இணைக்கப்படும். அத்துடன் மட்டுமின்றி, இந்த அவதாரத்தில் ரஜோகுணம்அதாவது பேரும் புகழும் பெற வேண்டும் என்ற ஆசை கொஞ்சம்கூட இல்லை. சுருக்கமாகச் சொன்னால், ஒருவர் ஸ்ரீராமகிருஷ்ணரை ஏற்றுக் கொள்கிறாரா இல்லையா என்பது ஒரு பெரிய விஷயமல்ல; ஆனால் எவர் ஒருவர் ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்களைத் தமது வாழ்க்கையில் கடைப்பிடிக்கிறாரோ அவரே ஆசீர்வதிக்கப்பட்டவராவர்.



## சுவாமி விவேகானந்தர்



சிறப்புக் கட்டுரை

# நவராத்திரி விழா



மைதிலி வேணுகோபால்

பக்தியும் கலையும் ஊடும் பாவுமாகப் பிணைந்து செல்லும் பண்டிகை நவ ராத்திரி.

இதில் ஒரு பக்கம் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்தோட, மறு பக்கம் கலை வெள்ளம் பெருக்கெடுத்தோடுகிறது.

நவராத்திரியில் பராசக்தியை முதல் மூன்று தினங்கள் துர்க்கையாகவும், அடுத்த மூன்று தினங்கள் மகாலட்சுமி யாகவும், கடைசி மூன்று தினங்கள் மகா சரஸ்வதியாகவும் பூஜிக்கின்றனர்.

ஒரே ஆதிசக்தியைத்தான் இம் மூன்று வடிவங்களில் வழிபடுகிறார்கள்.

## மது கைடப வதம்

எங்கும் ஊழி வெள்ளம். கற்பப் பிரளயம். எங்கும் ஒரே தண்ணீர்மயம்.



மகாவிஷ்ணு பிரளய ஜலத்தில் பாம்புப் படுக்கையில் உறங்கிக்கொண்டிருந்தார். அவர் காதுக் குறும்பையிலிருந்து மது, கைடபன் என்ற இரண்டு அரக்கர்கள் வெளிப்பட்டார்கள். அவர்கள் தவம் செய்து கொண்டிருந்த பிரம்மாவைக் கொல்ல முயன்றனர். பிரம்மா ஆதிபராசக்தியைப் பின்வருமாறு துதித்தார்—

''தேவீ! இந்த மது கைடபர்களை நீதான் அம்மா மயங்கச்செய்ய வேண்டும். திருமாலும் விழிப்புற வேண்டும். விழித்தெழும் திருமாலுக்கு இந்த மதுகைடபர்களான அசுரர்களை வதைத்து என்னைக் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தைக் கொடு, தாயே!'' என்று பிரம்மா இறைஞ்சினார்.

மயங்கச் செய்வது என்றால் என்ன? இந்த மது கைடப அசுரர்களுக்கு ஒரு விசித்திரமான வரபலம் உண்டு. தாங்களே முழுமனதுடன் சம்மதித்தால்தான் இவர்களுக்கு மரணம் ஏற்படும் என்பதே அது. இது எப்படிச் சாத்தியமாகும்? தாங்கள் இறக்க வேண்டும் என்று யார் தாம் விரும்புவர்? இந்த அசுரர்களின் அறிவை மயங்கச் செய்து, அதன் மூலம் தங்கள் அழிவைத் தாங்களே அவர்கள் தேடிக்கொள்ள வழி செய்யும்படி பிரம்மதேவர் பிரார்த்தித்தார்.

பிரம்மாவின் முன்பு காரிருளைப் பழிக்கும் கருநிறம் கொண்ட மகாகாளிதேவி





பிரசன்னமானுள். அவள் தனது பத்துக் கைகளிலும் பத்துத் தெய்விக ஆயுதங்களைத் தரித்திருந்தாள்.

தேவி, விஷ்ணுவை எழுப்பினுள். விழித்தெழுந்த மாதவனுக்கும் இரு அசுரர்களுக்கும் பெரும் போர் மூண்டது.

யுத்தம் முடிவதாக இல்லை. 'விநாச காலத்தில் விபரீதபுத்தி' என்பார்கள். அதுபோல, இப்போது அசுரர்கள் தாங்களாக விஷ்ணு பகவானுக்கு ஏதேனும் வரம் தரத் தயாராக இருப்பதாகக் கூறினுர்கள்.

உடனே மகாவிஷ்ணு, அவர்கள் இருவரும் தம் கையால் மாள வேண்டும் என்ற வரம் கேட்டார். அப்போதுதான் மது கைடபருக்குத் தங்கள் தவறு புரிந்தது.

மதுகைடபருக்குத் தண்ணீரில் மரணம் நேராது என்பதனுல் விஷ்ணு அவர்கள் இருவரையும் தம் துடையில் வைத்துக் கொன்ருர்.

தேவியின் சங்கல்பமே அசுரர்களைத் தங்கள் அழிவுக்குக் காரணமான வரத்தைக் கேட்கச் செய்தது.

மதுகைடபர்களைக் கொன்றது விஷ்ணு மாயை, விஷ்ணு துர்க்கை என்பார்கள். கோவில்களில் உள்ள சங்க சக்கர தாரிணியான துர்க்கையை வைஷ்ணவி என்று சொல்வார்கள்.

மதுவைப் பருகுவதில் ஏதோ இன்பம் இருப்பதாக அஞ்ஞானத்திலுள்ள மக்கள் நினைத்துக் கொள்ளலாம். ஆனுல் அது எத்தகைய துன்பத்தில் தள்ளிவிடுகிறது! அதர்மத்தில் நம்மை அழுத்திவிடும் சிற்றின்பங்கள்தாம் 'மது'. நமக்கென்று இருக்கும் தர்மங்களையெல்லாம் மறக்கச் செய்து, வெறும் பூச்சி (கீடம்) போல மாற்றி, பெயரளவில் மட்டும் மனிதனுக்க் காட்டுவதுதான் 'கைடபன்' ஆயிற்று.

### மகிஷாசுரமர்த்தினி

மகிஷன் எருமை வடிவினன். அஞ்ஞானம், சோம்பல் ஆகிய இரண்டின் ஒட்டு மொத்தமான உருவம்தான் மகிஷம் (எருமை).

தந்தையின் வரபலத்தினுல், மகிஷன் என்ற அசுரன் இந்திரனையே வெல்லும் வலிமை பெற்றிருந்தான். அத்துடன் அவன் தானும் தவம் செய்து, ஒரு பெண்ணுல்தான் தனக்கு மரணம் ஏற்படவேண்டும் என்ற வரம் பெற்ருன்.

வரம் பெற்றதும் அவன் தேவர்களைக் கொடுமைப்படுத்தினுன். தேவர்கள் ஓடி ஒளிந்தனர்.

இவ்விதம் இருந்தபோது, பல தேவ சக்திகளாகப் பிரிந்திருந்த பரப்பிரம்ம சக்தி ஒன்ருகத் திரண்டு, பூரணசக்தியுடன் மகாலட்சுமியாக வந்தது.

தேஜோமயமாக வந்த அன்னை மகாலட்சுமியைக் கண்டதும் தேவர் அனைவரும் துதித்தனர். அவளிடம் தத்தம் ஆயுதங்களைத் தந்தனர்.

தேவி, சிம்மவாகினியாகப் புறப்பட்டாள்.

படை திரட்டி வந்த மகிஷன், ஒரு பெண்ணைச் சற்றும் எதிர்பாராததனுல் திகைத்து நின்ருன். இரு படைகளும் கோரமாக மோதிக்கொண்டன.







இறுதியில் மகிஷாசுரமர்த்தினியாக வந்த அன்னை மகாலட்சுமி, மகிஷனை முடித்தேவிட்டாள். எருமையரசனின் கழுத்திலே ஏற்றமுடன் ஏறி நின்று தரிசனமளித்தாள்.

என்ன இருந்தாலும் அவள் தாய் அல்லவா? எனவே அவள் தாய்ப் பாசத்தோடு மகிஷனுக்கு மோட்சம் கொடுத்தாள்.



நம் இந்துமதத்தில் தத்துவங்கள் கலந்து கலந்தே காணப்படுகின்றன. சமத்துவ உணர்வைப் பெற, சம்ஹாரிணியோடு சம்ஹாரம் செய்யப்பட்ட அசுரனுக்கும் நாம் பூஜை செய்யும் மலர்கள் அர்ப்பணமாகின்றன. அன்னை காலடியில் விழும் மலர்கள் அசுரனின் தலையிலும் விழுகின்றன.

**சும்ப நிசும்ப வதம்**

சும்பன், நிசும்பன் என்று இரண்டு அசுரர்கள். இவர்கள் தேவர்களையும் சாதுக்களையும் துன்புறுத்தியதைப் பொறுக்கமாட்டாத மகாசரஸ்வதி போருக்குப் புறப்பட்டாள். முதலில் சண்டன், முண்டன், தூம்ரலோசனன் போன்ற குட்டி ராட்சதர்களை வென்றாள். இந்தத் தேவிதான் சண்டி சாமுண்டி என்றும் சொல்லப்படுகிறாள்.

சும்ப நிசும்பரின் சேனாதிபதியான ரத்தபீஜன் என்ற அசுரன் பயங்கர வரங்களைப் பெற்றிருந்தான். இவனது ஒரு துளி இரத்தம் பூமியில் விழுந்தால் அது இன்னொரு ரத்தபீஜனாக அதாவது மற்றோர் அசுரனாக வடிவெடுக்கும். அது காரணமாகவே அவனுக்கு ரத்தபீஜன் என்ற பெயர் ஏற்பட்டிருந்தது.

தேவி அவனைக் கொன்று உதிரத்தையும் பருகி, அவன் சகாப்தத்தையும் முடித்தாள். அதன் பிறகு சும்ப நிசும்பரையும் வதைத்து முடித்து வெற்றிக் கொடி நாட்டினாள்.

**சப்த மாதாக்கள்**

மேற்கூறிய தேவியர் வடிவில் தோன்றி அரக்கர்களை அழித்துப் பராசக்தி அப்போது அகிலத்தில் அமைதியை நிலை நாட்டினாள். ஒவ்வொரு தேவருக்கும் உரிய விசேஷ வடிவம், வண்ணம், வாகனம், ஆயுதம், ஆபரணம் ஆகியவற்றுடன் வந்து அந்த அந்தத் தேவரது சக்திகளும் போரில் ஆதிசக்திக்கு உதவி புரிந்தனர்.

பிரம்மாவிடமிருந்து வெளிப்பட்ட சக்தியே ப்ராஹ்மி என்ற மாதா. மகேச்வரனின் சக்தியே மாகேச்வரியாக வெளிவந்தாள். குமரனின் சக்தியாகக் கௌமாரியும், விஷ்ணுவின் சக்தியாக வைஷ்ணவியும், வராகப் பெருமானின் சக்தியே வாராஹியாகவும், நரசிம்ம சக்தியாக நாரஸிம்ஹியும், இந்திரனின் சக்தியாக இந்திராணியும் வெளிப்பட்டனர்.

மேற்கூறிய சப்த மாதாக்களில் ஒவ்வொருவரும் இந்தப் போரில் தத்தம் பங்கைச் சிறப்பாக நிறைவேற்றியுள்ளனர்.



## அமைதி நிலவியது—விஜயதசமி

அசுரர்களை மூன்று தேவியரும் வதம் செய்தது காரணமாகத் தேவர்கள், மனிதர்கள், பறவைகள், மிருகங்கள் ஆகிய உலகம் அமைதியையும் இன்பத்தையும் அனுபவித்தது. அபசகுனங்கள் மறைந்து மங்கள நிமித்தங்கள் தோன்றின. பழையபடி யஞ்ஞ யாகங்கள், வேதகோஷங்கள், வாத்திய முழக்கங்கள் என்று எங்கும் மகிழ்ச்சி பரவிற்று. மந்தமாருதம் வீசிற்று. மலர்கள் மலர்ந்தன. அண்ட சராசரம் முழுவதையும் வெற்றி தழுவிக்கொண்டது.

இதை நினைவுகூர்ந்தே பத்தாவது நாளை விஜயதசமியாகக் கொண்டாடுகிறோம். அன்று ஏதேனும் கல்வியை ஆரம்பித்துக்கொள்ள மிகவும் ஏற்றமான நாள். அன்றைய தினம் ஆசாரியனுக்குக் காணிக்கைகள் கொடுத்து வணங்குவர்.

## கலைவிழா

ஸ்ரீராமபிரான் இராவணனை வெல்ல நவராத்திரியில் தேவியை வழிபட்டதாக ஒரு வரலாறு உண்டு.

புரட்டாசி அமாவாசையை அடுத்துப் பத்து நாட்களுக்கு வீடுகளில் லலிதா சகஸ்ரநாமம், லக்ஷ்மி சகஸ்ரநாமம், மகிஷாசுரமர்த்தினி சுலோகம், சரஸ்வதி சகஸ்ரநாமம் படிப்பார்கள்,

சண்டி ஹோமம், சுவாஸினி (சுமங்கலி) பூஜைகள் நடைபெறும்.

ஒவ்வொரு நாளும் ஒரு கன்னிப் பெண்ணைத் தேவியாகப் பாவித்துப் பூஜை செய்வார்கள்.





பொம்மைக் கொலுவிற்காகப் பல விதமான பொம்மைகளைப் படிகளில் அமைத்து அழகுற அடுக்குவதில், தத்தம் கற்பனைத் திறன்களையும் கலைத்திறன்களையும் காட்டுவார்கள்.

சிறுமிகளுக்கு விதம் விதமான வேஷம் போட்டுப் பார்த்து மகிழ்வார்கள்.

அக்கம்பக்கத்து வீட்டார், சிநேகிதிகள், உறவினர்களை அழைத்து, மங்களமாகத் தாம்பூலம், சீப்பு, கண்ணாடிகளை வைத்துக் கொடுப்பார்கள்.

சரஸ்வதி பூஜையை ஆயுதபூஜை என்பர். புத்தகங்கள், வாத்தியங்கள், மற்றுமுள்ள கருவிகள் என்று தத்தம் தொழிற்கருவிகளைத் தூய்மையாக்கி, சந்தனம் குங்குமம் இட்டு, மலர்களால் அலங்கரித்து, தூபதீபம் காட்டிப் பூஜை செய்து வழிபடுகின்றனர். ‘செய்யும் தொழிலே தெய்வம்’ என்றபடி, தம் தொழிலுக்கு ஆதாரமான கருவியைத் தெய்வமாகப் போற்றும் உயர்ந்த பக்தியும் பண்பும் இதில் பளிச்சிடுகின்றன.

பலவித நடன நிகழ்ச்சிகள், இசைக் கச்சேரிகள், சமயச் சொற்பொழிவுகள் ஆகியவையும் நவராத்திரியின்போது நடைபெறும். பக்தியில் ஆரம்பித்துக் கலையிலும் பின்னிப் பிணைகிறது இந்தப் பண்டிகை. ❁





# சிவ சிந்தனை

**கிருபானந்தவாரி**

இறைவன் என்ற சொல் இறை என்ற பகுதியடியாகப் பிறந்தது. எல்லா உயிர்களிலும் எல்லாப் பொருள்களிலும் இறைவன் நீக்கமற நிறைந்து நிற்கிறான். இனி எல்லாம் அவனிடத்திலே இருக்க அவன் அவற்றுக்கு உறைவிடமாக இருக்கிறான். இது இறைவனுடைய விசுவரூபம்.

எல்லாப் பொருள்களிலும் தங்க வேண்டுமானால் சிறிய - மிகச் சிறிய - பொருளாக இருக்கிறான். மேருகிரி முதலிய - பொருள்கள் யாவும் அவனிடத்திலேயே தங்கும்படி அந்தப் பெருமான் மிகப் பெரிய பொருளாக விளங்குகிறான். இதனை உபநிடதம், 'அணோரணியாந் மஹதோ மஹீயாநாத்மா' என்று கூறுகிறது.

அணுவுக்கு அணுவாகவும் மகத்துக்கு மகத்தாவும் விளங்குபவன் இறைவன்.

**ஒரு பழக் கதை—பழம் கதை**

திருக்கயிலாயமலையில் உமாதேவியாருடன் சிவபெருமான் வீற்றிருக்கிறார். விநாயகப்பெருமானும் முருகப்பெருமானும் தாய்தந்தையரை வணங்கி வழிபடச் சென்றார்கள்,

தினந்தோறும் பழங்காலத்தில் மைந்தர்கள் தாய்தந்தையரை வழிபடுகிற வழக்கம் இருந்தது.

ஆனைமுகனும் ஆறுமுகனும் அம்மையப்பரை வலம் வந்து வணங்கினார்கள். சிவமூர்த்தியின் திருக்கரத்தில் ஒரு தெய்வ மாதுளங்கனி இருந்தது. அதனை இருவரும் கேட்டார்கள்.

அரனார், ''அகில உலகங்களையும் ஒரு நொடிப்பொழுதுக்குள் வலம் வருபவருக்கு இந்தக் கனி தரப்படும்'' என்று அருளிச்செய்தார்.

முருகப்பெருமான் மயிலின் மீது ஏறி அகில உலகங்களையும் ஒரு நொடிப் பொழுதுக்குள் வலம் வந்தார்.

'எல்லாம் சிவத்துக்குள் ஒடுக்கம்' என்று கூரிய சீரிய மதியால் சிந்தித்து ஆனைமுக அண்ணல் அம்மையப்பரை வலமாக வந்து கனி பெற்றார்.

இந்தப் பழக் கதை ஒரு பெரிய தத்துவத்தை உணர்த்துகிறது.

1. தந்தைக்கு உபதேசித்த தயாபரனுக்குச் சிவத்துக்குள் எல்லாம் ஒடுக்கம் என்பது தெரியாதா? தெரியும்.

2. எல்லா உலகங்களையும் சர்வ வல்லமையுடைய விநாயகரால் வலம் வர இயலாதா? இயலும்.

3. சிவபெருமான் இரு மைந்தர்களும் கனி கேட்டபோது உள்ள கனியை உடைத்துப் பகிர்ந்து தரக்கூடாதா?

4. அல்லது ஒரு புதிய கனியை உண்டாக்கித் தரக்கூடாதா? வீதியில் விளையாடுகிறவன்கூட ஏதேதோ பொருள்களைத் தருவிக்கிறானே.

5. ''தம்பிக்கே தந்துவிடுங்கள். எனக்கு வேண்டாம்'' என்று விட்டுக்

கொடுக்கிற குணம் விநாயகரிடம் இல்லையா?

6. ''அப்பா! அண்ணுவுக்கே அதைக் கொடுங்கள். நான் பிறகு வாங்கிக் கொள்ளுவேன்'' என்று ஒதுங்கிப்போகிற தியாக புத்தி வேலனிடம் இல்லையா?

7. ஒரு சிறிய கனி காரணமாக, உலகத்தை வலம் வந்தால் கூலி கட்டுமா?

8. பழம் காரணமாக, திருக்கயிலாய மலையில் முருகனும் விநாயகரும் போட்டி யிடலாமா?

9. பழத்தின்மீது ஞானமே வடிவான விநாயகருக்கும் ஞானபண்டிதனுக்கும் அத்தனை ஆசையா? என்ற வினுக்கள் அடுக்கடுக்காக எழுகின்றன.

இத்தனை வினுக்களும் தவிடுபொடி யாகுமாறு விடை பகர்கின்றேன்.

இறைவனைப்பற்றி நாம் முன்பு என்ன சிந்தித்தோம்? 'எல்லா இடங்களிலும்



எல்லாப் பொருள்களிலும் அவன் தங்கி யிருக்கிறுன்', 'அவனிடம் எல்லாம் தங்கி யிருக்கின்றன' என்ற இரண்டு விதமாக நினைத்தோம் அல்லவா?



சுகமும் துக்கமும் நாம் செய்த கர்மத்தின் பலனுகவே ஏற்படுகின்றன. ஆதலால் அவற்றை எல்லோரும் அனு பவித்துத்தான் தீர வேண்டும். அதனுல்தான் சுகம் அனு பவிக்கும்போது பகவானை மறக்கக் கூடாது. துக்கத்தை அனுபவிக்கும்போது பகவானை நிந்திக்கக் கூடாது.

வேத சாஸ்திரங்களில் சொல்லியபடி உனது கடமை களைச் செய்து வா.

எந்தச் செயலைச் செய்தாலும் பகவானை நினைத்துக் கொண்டே செய்.

பகவான்தான் எல்லாரையும்விடப் பெரியவர், எல்லோ ருக்கும் குரு. அவரே இந்த ஜகத்துக்கெல்லாம் தாயும் தந்தையுமாவார். ஆகவேதான் நாம் செய்யும் எல்லாச் செயல்களையும் அவருக்கே அர்ப்பிக்க வேண்டும்.

—மத்வாசாரியர்

சிவத்துக்குள்ளே எல்லாவற்றையும் பார்த்தார் கணபதி.

எல்லாவற்றுக்குள்ளும் சிவத்தைப் பார்த்தார் முருகர்.

இந்த அரிய பெரிய உண்மையை உணர்த்துகிறது இந்தப் பழங்கனத.

'இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிருனே. உலக மாயை அவனைப் பற்ருதோ?' என்ற வினு எழும்.

உப்பு விளைகிற இடம் கடல். கடலின் உவர்நீரில் பிறந்து, உவர்நீரைப் பருகி, உவர்நீரில் வாழ்கிற மீனுக்கு உவர் ஏறுவதில்லை. மீன் உண்பவர்கள் கடல்மீனுக்கும் உப்பிட்டுத்தான் சமைத்து உண்பார்கள். அது போல் இறைவன் எங்கும் உறைகினும் உலகமாயை அவனைப் பற்ருதென உணர்க.

'எங்கும் நிறைந்த பொருள் இறைவன் என்ருல், ஏன் அது நமது கண்ணுக்குத் தெரியவில்லை?' என்பாரும் உள்ளனர். விறகிலே நெருப்பு இருக்கிறது. பாலில் நெய் இருக்கிறது. ஆனுல் இவை கண்ணுக்குத் தெரிகின்றனவா? இல்லை. விறகிலே தீயும், பாலில் நெய்யும் கண்ணுக்குத் தெரியாமையால் அவை இல்லை என்ருல் நமக்கு அறிவு இல்லை என்று உலகம் சிரிக்காதா?

விறகைக் கடைந்தால் தீ வெளிப்படும். பாலைக் கடைந்தால் நெய் வெளிப்படும். அது போல, தியானம் புரிந்தால் இறைவன் வெளிப்பட்டுக் காட்சி தருவான். சாதனைகள் செய்தால் தேவரும் மூவரும் காணமாட்டாத சிவம் தானே வந்து வெளிப்பட்டுத் தோன்றும்.

**—அடுத்த இதழில் முடியும்**

## செய்திகள்

❁ நாட்டறம்பள்ளியில் ஆகஸ்ட் 20, 21 ஆகிய தேதிகளில் ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்தப் பேரவையின் ஆண்டு விழா நடைபெற்றது.

ராமகிருஷ்ண மடங்களைச் சேர்ந்த துறவியர் விழாவில் பங்குகொண்டனர்.

தமிழ்நாட்டின் பல ஊர்களிலிருந்தும் சுமார் 450 பக்தர்கள் வந்திருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ண இயக்கத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்களை இந்த விழாவில் பார்க்க முடிந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் பெயரால் இயங்கி வரும் மன்றங்கள் சங்கங்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகள் இந்த இரண்டு நாள் விழாவிலும் தத்தம் கருத்துக்களைத் தெரிவித்து உரையாற்றினர்.

ராமகிருஷ்ண இயக்கத்தின் ஆன்மிகம், கிராம முன்னேற்றம், கல்வி, மருத்துவம் பற்றிய பணி முறைகள் ஆராயப் பெற்றன.

❁ சேலம் மாவட்டம், மங்களாபுரம் அரசினர் மேல் நிலைப் பள்ளியில் செப்டம்பர் 5-ஆம் நாள் சுவாமி விவேகானந்தர் இலக்கிய மன்ற விழா நடைபெற்றது. தலைமையாசிரியர் பெரியண்ணன் தலைமை வகித்தார். சுவாமி ராஜேஷானந்தர் சிறப்புரை நிகழ்த்தினுர்.

❁ இலங்கையில் இனக் கலவரத்தினுல் பாதிக்கப்பட்ட மக்களிடையே ராமகிருஷ்ண மிஷன் முதல் கட்டமாக ரூ. 10,000 மதிப்புள்ள சமையல் பாத்திரங்கள், போர்வைகள், ஆடைகள், பாய்கள், உணவுப் பொருள்கள் ஆகியவற்றை ஆகஸ்ட் மாத இறுதியில் விநியோகித்தது.







# நூல் அறிமுகம்

**1. சந்தோஷி மாதா விரத மகிமை**

கதை, விரதமுறை, ஆயிரத் தெட்டுப் போற்றி, தோத்திரப்பாடல் இணைந்தது. பக்கம் 103—ரூ. 6

**ஆசிரியர்: புலவர் நாகசண்முகம்**

தமிழ்நாடு பதிப்பகம், 1, சுந்தரம் ஐயர் தெரு, தியாகராய நகர், சென்னை—600 017.

**2. ஆலயங்களும் ஆகமங்களும்**

ஆலயங்கள் பற்றிய விவரங்கள் அடங்கிய நூல். பக்கம் 176—ரூ. 15

**ஆசிரியர்: நஜன்**

பிரதிபா பிரசுரம், 39, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை—600 004.

**3. உயர்வளிக்கும் உபாசனை**

விஷயம் தெரிந்த ஒருவர் இந்த நூலை எழுதியிருக்கிறார். பக்கம் 104—ரூ. 6

**4. ஸ்ரீ துர்க்கா பூஜை**

பூஜைக்கான வழிவகைகளைத் தெரிவிக்கும் நூல். பக்கம் 72—ரூ. 3-75

மேலே குறிப்பிட இரண்டு நூல்களுக்கும்

**ஆசிரியர்: ஸ்ரீதுர்க்கை சித்தர்**

பைலட் பப்ளிகேஷன்ஸ், 6, நல்லதம்பி செட்டி தெரு, . எல்லீஸ் ரோடு, சென்னை—600 002.

**5. சிலையும் நானே! சிற்பியும் நானே!**

மாணவர்களிடையே கட்டுப்பாடு, ஒழுக்கம், பண்பாடு ஆகியவற்றை வளர்க்கும்பொருட்டு வெளிவந்துள்ள நூல். மாணவருக்கு உரிய இந்த நூல் கல்வி நிறுவனங்களுக்கு ஏற்றது. பக்கம் 128—ரூ. 8

**தமிழில் : எம். கோவிந்தராஜ்**

ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆச்ரமம், 26, துரைசாமி ரோடு, தியாகராய நகர், சென்னை-600 017.

**6. கோதை தமிழ் அமுதம்**

நாச்சியார் திருமொழியில் 'கருப்பூரம் நாறுமோ?' என்று தொடங்கும் பாசுரத்திற்கு விளக்கமாக அமைந்த நூல். பக்கம் 80—ரூ. 3

**ஆசிரியர் ஏ. ஸ்ரீராமுலு தேசிகன்**

**7. நாராயணனே பரம்பொருள்**

பக்கம் 90—ரூ.3

**ஆசிரியர் : ஆர். ராமஸ்வாமி ராமாநுஜதாசர்**

மேற்கூறிய இரண்டு நூல்களையும் வெளியிட்டோர்: ஆழ்வார்கள் அமுத நிலையம், 37, சௌத் கூவம் ரோடு, கோமளேசுவரன்பேட்டை, சென்னை-600 002.

**8. ஏகாதசி மாகாத்மியம்**

பக்கம் 26—ரூ. 2

**ஆசிரியர் : ஸ்ரீவத்ஸ வெ. சோமதேவ சர்மா**

பவானி புக் சென்டர், 19, ஸ்டேஷன் ரோடு, சென்னை-600 033.

**9. திருவடி மாலை**

அருளிசைப் பாடல்களின் தொகுப்பு. பக்கம் 84—ரூ. 5

**ஆசிரியர் : இரா. இளங்கோவன்**

திருக்குமரன் பதிப்பகம், வள்ளுவர் இல்லம், 10-4-184, சேசாபிரான் தெரு, சித்தூர்—517001.

**10. பகவத் கீதை**

பாரதியார் தமிழ்ப்படுத்தியது. பக்கம் 139—ரூ. 10

சமுதாயம் பிரசுராலயம், கோயமுத்தூர்—15.

சாகசம் தேவைதான். ஆனால் அது எப்போதும் தர்மத்தின் அடிப்படையில் இருக்க வேண்டும்.

# இரண்டு பெண்களின் சாகசம்

**- வால்மீகி**

எதிரியை வசப்படுத்தச் சாமம், தானம், பேதம், தண்டம் என்ற நான்கு வகையான உபாயங்களைக் கையாள வேண்டும் என்பார்கள்.

இதே போல் பெண்களும் தங்கள் கணவன்மார்களை வசப்படுத்தச் சில உபாயங்களைக் கையாளுவதுண்டு. முதலில் ஸ்திரீ சாகசத்தைக் கையாளுவார்கள். அது பயன்படாவிட்டால் கண்ணீரைக் காட்டிக் கெஞ்சி அழுது பார்ப்பார்கள். இதுவும் பயன்படாமற் போகுமானால் அதட்டி உருட்டி மிரட்டுவது கடைசி ஆயுதமாக இருக்கவே இருக்கிறது. ஸ்திரீ சாகசம் தோற்றதாகச் சரித்திரமே இல்லை.

சாட்சாத் மகாலட்சுமி சாதாரண மனித உருக் கொண்டு சீதையாக அவதரித்தபொழுது இராமனைத் தன் வசப்படுத்த, சாதாரணப் பெண்ணைப் போலவே சில சந்தர்ப்பங்களில் சாகசம் செய்யும் கட்டம் மிகமிக ரசமானது என்பதுடன், உயர்ந்த படிப்பினையைப் போதிப்பதாகவும் இருக்கிறது.

தந்தை தசரத சக்கரவர்த்தியின் உத்தரவைச் சிற்றன்னை கைகேயியின் வாயிலாகக் கேட்டுப் பதினான்கு ஆண்டு வனவாசம் செய்யப் புறப்படுகிறான் இராமன். சீதையை எப்படியாவது சமாதானப்படுத்தி அவளை அயோத்தியிலேயே விட்டுச் செல்ல வேண்டும் என்பதற்காக அவளிடம் என்ன என்னவோ நியாயங்களை அவன் எடுத்துச் சொல்கிறான்.

''பரதன் பட்டத்துக்கு வந்துவிட்டால், அவன் தாய் கைகேயியின் கைதான் ஓங்கி நிற்கும். என் தாய் சிறுமைப்படுத்தப்படலாம். அவளுக்கு உன்னைத் தவிர வேறு யார் ஆறுதல் அளிக்க முடியும்? இது ஒரு புறம் இருக்க, என்னை விட்டுப் பிரிந்த என் தாய் ஓயாமல் அழுது புலம்பிக்கொண்டேயிருப்பாள். அவளுக்கு ஆறுதல் கூற நீ பக்கத்தில் இருக்க வேண்டாமா?'' என்று தன் அன்னையை ஒரு காரணமாக வைத்து, சீதைக்குத் தேறுதல் கூற முற்படுகிறான் இராமன்.

சீதையும் முதலில் அமைதியாகவே பேசுகிறாள். அவள் சொல்கிறாள்:—

''உலகில் ஒவ்வொருவரும் அவரவருடைய வினைப்படி நல்லது கெட்டதை அனுபவிக்கிறார்கள். மனைவி என்பவள் மாத்திரம் அப்படியல்ல. அவள் தன் கர்மபலனை மட்டுமல்லாமல் தன் கணவனின் கர்மபலனையும் சேர்த்து அனுபவிக்கிறாள். ஆகவே நீங்கள் காட்டுக்குப் போக உத்தரவிடப்பட்டிருந்தால் அந்த உத்தரவு என்னையும் சேர்த்துத்தான். மனைவியின் உத்தம தர்மம் கணவன் எங்கே போனாலும் அவன்கூடப் போவது







தான். காட்டில் என்னுல் உங்களுக்கு ஒரு துன்பமும் இராது. உங்களைப் போலவே கிடைத்ததைச் சாப்பிட்டுக் கொண்டு உங்களுக்குப் பணிவிடை செய்து காலம் கழிப்பேன்.''

இப்படிச் சீதை சமாதானமாகவும் அமைதியாகவும் வாதாடியும் கூட இராமன் தன் பிடிவாதத்தைக் கைவிடுவதாயில்லை. ''காட்டிலே புலி இருக்கும், சிங்கம் இருக்கும், யானை இருக்கும்'' என்று அவன் பயமுறுத்த ஆரம்பித்தான்.

அப்பொழுது சற்றுக் காரமாகவும் கண்டித்தும் பேச வேண்டும் என்ற எண்ணம் சீதைக்கு ஏற்பட்டது.

''என் பிரபுவா இப்படிச் சாதாரணப் பயங்கொள்ளி மாதிரிப்பேசுவது? என்னை இங்கே விட்டு நீங்கள் மாத்திரம் காட்டிற்குப் போனதாக என் தந்தை ஜனக மகாராஜா கேள்விப்பட்டால் அவர் என்ன நினைப்பார் தெரியுமா?

**ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்·**

'ராமன் என்ருல் உலகிற் சிறந்த வில்லாளி, வீராதிவீரன், சூராதிசூரன், அவனுடைய வலிமைக்கு உலகில் வேறு யாருமே நிகரில்லை. இப்படியெல்லாம் ராமனைப்பற்றி நினைத்துக் கொண்டிருந்தோமே! அந்த ராமன் கேவலம்

**ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்**

ஒரு பெண் அல்லவா? தங்கத்தில் செய்த கண்ணுக்கினிய அழகிய புருஷ விக்கிரகம் அல்லவா இராமன் என்ற பெயரில் வரனைப் போல் நடித்து என் பெண்ணைக் கவர்ந்து போய்விட்டது? சுயம்வர மண்டபத்தில் எத்தனையோ மாவீரர்கள் இருக்கும்போது போயும் போயும் கட்டிய மனைவியைக் காக்க முடியாத ஒரு பேடிக்கு அல்லவா கிளிபோல வளர்த்த என் பெண்ணை அநியாயமாகப் பலியிட்டு விட்டேன்?

**தேஜோ நாஸ்தி பரம் ராமே தபதீவ திவாகரே.**

எண்ணற்ற கிரணங்களுடன் சூரியன் நிகரற்ற தேஜஸ்ஸுடன் விளங்குவதைப் போல, இந்த இராமனிடத்தில் ஒப்பற்ற வீரமும் தேஜஸ்ஸும் விளங்குவதாக எண்ணி ஏமாந்து போனேனே! ஒரு சாதாரண மனிதனிடம் காணும் சக்தியைக்கூட அல்லவா இவனிடம் காணவில்லை? எண்ணற்ற பாவங்களைச் செய்தாவது கட்டிய மனைவியைக் கணவன் காப்பாற்றியே தீரவேண்டும் என்று சாஸ்திரம் கூறுகிறது. பேடித்தனம் இராமனின் இந்தச் சாத்திர அறிவைக் கூடவா மழுங்கச் செய்துவிட்டது?' என்றுதான் நினைப்பார்.''

இப்படி இராமனின் சுயமதிப்பையும் வீரபராக்கிரமத்தையும்சீதை தொட்டுப் பேசி, ''நான் இருக்க வேண்டிய இடம் நீங்கள் இருக்க வேண்டிய இடம்'' என்ருள். இத்துடன் நிறுத்தவில்லை. தன் குலப்பெருமையையும் கொஞ்சம் எடுத்துச் சொல்லுகிருள்:—

''இதோ என் பெண் சீதையை உனக்கு வாழ்க்கைத் துணைவியாகக் கொடுக்



கிறேன் என்று சொன்னுரே என் தந்தை, 'என் பெண்ணை' என்று அவர் ஏன் சொன்ஞர் தெரியுமா? ஜனக மகராஜா யாகமும் யோகமும் தவமும் செய்து சித்தியடைந்தவரல்ல. கர்மத்தினுலேயே சித்தியடைந்த கர்மவீரர் அவர். மனைவியை விட்டுக் கணவன் ஒருகாலும் பிரியக் கூடாது என்ற கொள்கையுடையவர். உங்களைப் போல அவர் ராஜ்ய அனுபவம் இல்லாதவரல்ல. ஒரு பெரிய சாம்ராஜ்யத்தின் அதிபதி; ராஜ தர்மமும் இல்லற தருமமும் ஆகிய இரண்டும் தெரிந்தவர். திருமணத்தின்போது,

**இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ ।**
**ப்ரதீச்ச சைநாம் பத்ரம் தே**
**பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா ॥**



'ராமா! என் பெண் சீதையை உன் சக தர்மிணியாகக் கொடுக்கிறேன். அவள் கரங்களைப் பற்றிக்கொள்' என்றாரே! உங்களுடைய தார்மிகச் செயல்களில் எனக்கும் சமபங்கு உண்டு என்று அப்பொழுதே சொல்லவில்லையா? அவர் அன்று சொன்னதை ஏற்றுக்கொண்டு தானே என் கரம் பற்றினீர்கள்? பற்றிய கரத்தை இப்பொழுது உதறித் தள்ளி விட்டுப் போவது கொடுத்த வாக்கை மீறுவதாகாதா? ஒரு க்ஷத்திரியர், அதிலும் சூரிய குலத்தில் தோன்றிய ஒருவர் சத்தியத்தை மீறினர் என்று சொல்லக் கேட்டால் என் தந்தை உயிரோடு இருக்க மாட்டார். இப்படிப்பட்ட ஒரு கோழைக்குப் பெண்ணைக் கொடுத்தோமே என்ற வெட்கமே அவரைக் கொன்றுவிடும். நீங்கள் கானகம் போன பிறகு இந்த அவமானங்களைச் சகித்துக் கொண்டு நான் உயிர் வாழ மாட்டேன். எனக்கும் அந்திமக்கிரியைகளைச் செய்து முடித்துவிட்டுக் காட்டுக்குப்போங்கள்!''

இப்படிச் சீதை பற்றின்றித் தர்மவாதம் செய்யவே இராமனுக்கு வேறு வழி இல்லாமற் போய்விட்டது. 'கீழே விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை' என்ற மாதிரி, ''சீதை! நீ என்னோடு கானகத்தில் வசிப்பதற்காகவே பிறந்தவள். உன்னை விட்டு ஒரு விநாடியும் என்னால் பிரிந்திருக்க முடியாது. இருந்தாலும் உன் கருத்து எனக்குத் தெரியாததனால் உன்னைச் சோதித்துப் பார்த்தேன்'' என்று கூறி அவளை அழைத்துச் செல்ல இணங்குகிறான் இராமன்.

இந்தக் கதை முக்கியமாகப் பெண்களுக்குச் சிறந்த படிப்பினை. பெண்களுக்கு அவசியமான சமயங்களில் சாகசம் தேவைதான். அந்தச் சாகசம் சுயநலத்தை அடிப்படையாகக் கொண்டு இருக்கக்கூடாது. தர்மத்தையும் கணவனின் நலனையும் அடிப்படையாகக் கொண்டிருந்தால் அதற்குத் தோல்வியே கிடையாது. ○○○○○○○

சில சமயங்களில் பெண்கள் செய்யும் சாகசம் அநியாயமாகவும் அடாவடித்தனமாகவும் தோன்றுவதுண்டு. உதாரணத்துக்குக் கைகேயியை எடுத்துக் கொள்ளுவோம்.

இராமனை அவனது சொந்தத் தாய் கோசலையைவிடவும் அதிக ஆசையோடு வளர்த்தவள் கைகேயி. சொந்த மகன் பரதனைவிடப் பல மடங்கு அதிக ஆசை வைத்திருந்தாள் இராமனிடத்தில் கைகேயி. அப்படி இருந்தும் மந்தரையின் துர்ப்போதனைகளைக் கேட்டபொழுது பெற்ற மகன் பட்டத்துக்கு வரவேண்டும் என்றும், இராமன் காடு செல்ல வேண்டும் என்றும் கணவனிடம் சாகசம் புரிந்தாள். அவளுடைய தர்மவிரோதமான சாகசம் ஜயிக்கலாமா? மூத்தவன் இராமன் இருக்க இளையவன் பரதனுக்குப் பட்டம் கட்ட வேண்டும் என்று கைகேயி கோரியது அதர்மம் அல்லவா? கணவன் அலறித் துடிப்பதையும் பொருட்படுத்தாமல் திருமணம் புரிந்த கணவனைப் பூச்சிப் புழுவைப் போல மதித்து, உதாசீனம் செய்து, தனது தர்மவிரோதமான கோரிக்கையை அவள் வலியுறுத்தினாள். அதில் வெற்றியும் கண்டுவிட்டாள். அவளுடைய சாகசம் வெற்றி அடைந்ததில் தர்மம்

எங்கே இருக்கிறது? இந்தச் சந்தேகம் எவருக்கும் எழுவது இயற்கை.

ஒரு காரியம் அதர்மம் போலத் தோன்றுவதனல் தர்ம விரோதமாகி விடாது. தர்மம் போலத் தோன்றுவதனல் அது தர்மத்துக்குப் பொருத்தமான தாகாது. தர்மம் மிக மிகச் சூட்சும மானது. கைகேயின் சாகசம் இதற்கு ஓர் உதாரணம்.

இராம லட்சுமண பரத சத்துருக்கினர் பிறப்பதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே தசரதர் ஒரு பிரதிக்ஞை செய்திருந்தார். கைகேயியின் அழகில் மயங்கிய தசரதர் சுலபத்தில் அவளை மணந்து கொள்ளவில்லை. ''உங்கள் பெண் கைகேயியின் வயிற்றில் பிறக்கும் பிள்ளையே என் அடுத்த வாரிசாவான்'' என்று கேகய மன்னனுக்குச் சத்தியம் செய்து கொடுத்த பிறகுதான் கைகேயியைத் தசரதர் மணந்தார். இராமன் மூத்த பிள்ளையாக இருந்தாலும் தசரதர் தமது சத்தியத்துக்கு மாருக நடக்க முயன்ற பொழுது சூரிய வம்சத்தின் பெருமை, பல்லாயிரம் ஆண்டுகளாகக் காத்து வந்த சத்தியம், கைகேயியின் உருவில் வந்து தசரதரைக் காத்தது. அதாவது தசரதரின் அதர்மமான செயல் தர்மத்தின் போக்குக்கு உதவியது.

உலகத்தில் அதர்மத்தை வெட்டிச் சாய்த்து தர்மத்தை நிலைநிறுத்த அவதரித்தவன் இராமன். அவன்





செய்ய வேண்டிய தார்மிகச் செயல்கள் அயோத்தியில் இல்லை. அனேக மைல் தூரத்திற்கு அப்பால் காடுகளிலும் மலைகளிலும் இலங்கையிலும் இருந்தது. இராமன் கானகம் சென்று அரக்கர் குலத்தை அழித்துத் தர்மத்தை நிலை நிறுத்தக் கைகேயி உதவினுள்.

'அவள் தெரிந்தா உதவினுள்? தன் மகன் நாடாள வேண்டும் என்ற சுய நலத்தில் அல்லவா இராமனைக் காட்டுக்கு அனுப்பினுள்?' என்று கேட்கலாம். தெரிந்து செய்தாலும் சரி, தெரியாமல் செய்தாலும் சரி, தர்மத்துக்கு உதவும் காரியம் தர்மமானதுதான். புலிக்குப் பயந்து உயிரைக் காத்துக் கொள்ளும் சுயநலத்துடன் வில்வ இலைகளைச் சிவலிங்கத்தின் மீது பறித்துப் போட்ட வேடனுக்கும் முக்தி கிடைத்தது. பல பாவங்களைச் செய்து, கடைசிக் காலத்தில்கூடக் கடவுளை நினைக்காமல், தன் குழந்தையான நாராயணன் பெயரைச் சொல்லிக் கொண்டு செத்த அஜாமிளனுக்கும் வைகுண்டம் கிடைத்தது. சுயநலம் இழையோடினுலும் தர்ம பரிபாலனத்துக்கு உதவும் எந்தக் காரியமும் தார்மிக மானதுதான்.








*சுவாமி கமலாத்மானந்தர்*

**ஓர் அன்பர், திருவல்லிக்கேணி**

**கேள்வி: சிவன் கோயில் உற்சவங்கள் ஒரே மாதிரியாக இல்லாமல், பூஜை முறைகளிலும் வாகனங்களின் வரிசைக் கிரமங்களிலும் முன்பின்னுக இருப்பதற்கு என்ன காரணம்?**

**பதில் :** ஆலயங்கள் அனேத்தும் ஆகமத்தை ஒட்டி அமைக்கப்பட்டுள்ளன.

எந்த ஆலயம் எந்த ஆகமத்தை ஒட்டி அமைக்கப் பட்டுள்ளதோ, அந்த ஆகமத்தில் சொன்னபடி நித்திய பூஜைகளும் திருவிழாக்களும் நடத்த வேண்டும் என்பது ஆகம விதியாகும்.

ஆகமங்கள் பலவாக இருப்பதனுல், ஆலய அமைப்பும் திருவிழாக்களும் வாகனங்களின் வரிசைக் கிரமமும் அதற்கு ஏற்ருற்போல் பல விதமாக உள்ளன. இதுவே கோயில் திருவிழாக்கள் பலவித மாக மாறுபட்டுக் காணப்படுவதற்கு உரிய காரணம்.

**சி. வேங்கடசுப்பிரமணியன், புதுக்கோட்டை**

**கேள்வி : பஞ்சபேதம் என்ருல் என்ன?**

**பதில் :** ஐந்து வேறுபாடுகள் என்ற கருத்தில் வதைக் குறிக்கிறது. தமிழ்நாட்டுக் கிராமங்களின் எல்லேயில் தீய சக்திகளே நுழையவிடாமல் தடுக்கும் சக்தியாக விநாயகர் திகழ்கிருர்.

விநாயகரின் வலப் பக்கம் வளேந்த துதிக்கை, பக்தர்களுக்கு வெற்றியையும் செல்வத்தையும் வழங்குவதை உணர்த்துகிறது.

இவை தவிரவும், துதிக்கையில் வலம்புரி, வலஞ் சுழி என்ற பாகுபாடும் உண்டு.

விநாயகர் தம்மை நோக்கியபடி துதிக்கையைச் சுற்றியிருக்கும் நிலேக்கு வலஞ்சுழி என்று பெயர்.

விநாயகரின் துதிக்கை வலப் பக்கமாகத் தூக்கிய நிலேயில் இருப்பின் வலம்புரி எனப்படும்.

வலஞ்சுழியைவிட வலம்புரி விசேஷமாகக் கருதப் படுகிறது. பக்தன் வேண்டும் வரங்களேயெல்லாம் தருவதற்கு ஆயத்த நிலேயில் இருப்பவரே வலம்புரி விநாயகர்.

(தியாகராஜநகரைச் சேர்ந்த ரகுராஜன் சேட்

பஞ்சபேதம் என்ற சொல் மத்வ சித்தாந்தத்தில் பயன்படுத்தப்படுகிறது. அவை—

1. பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்குமிடையே உள்ள வேற்றுமை, 2. ஜீவாத்மாக்களுக்கிடையே உள்ள வேற்றுமை, 3. பரமாத்மாவுக்கும் ஜடப் பொருளுக்குமிடையே உள்ள வேற்றுமை, 4. ஜடப் பொருள்களுக்கிடையே உள்ள வேற்றுமை, 5. ஜீவாத்மாவுக்கும் ஜடப் பொருளுக்குமிடையே உள்ள வேற்றுமை.

இதே கருத்தை வேறுவிதமாகவும் சொல்வதுண்டு. அது வருமாறு—

1. ஈச்வரனும் ஜீவனும் வேறு, 2. ஒரு ஜீவனும் மற்றொரு ஜீவனும் வேறு, 3. ஈச்வரனும் ஜட உலகமும் வேறு, 4. ஜடப் பொருள்கள் ஒன்றுக்கொன்று வேறு, 5. ஜீவனும் ஜட உலகமும் வேறு.

''பஞ்சபேதம் எனப்பெறும் இந்த ஐந்து வேற்றுமைகளும் நித்தியமானவை. எக்காலத்திலும் எந்தச் சூழ்நிலையிலும் போற்றத்தக்கவை. வேற்றுமைகளும் தாரதம்யமும் ஜீவன் முக்தர்களுக்கிடையேயும் மறைவதில்லை'' என்று மத்வ சம்பிரதாயம் கூறுகிறது.

மேற்கூறிய பஞ்சபேதம் பற்றிய சித்தாந்தம், 'எல்லாம் ஒன்று' என்று சொல்லும் அத்வைதத்தை மறுக்கிறது.

பி. சந்திரன். சென்னை-4

**கேள்வி:** செப்டம்பர் ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தின் முகப்புப் படத்தில் விநாயகரின் துதிக்கை இடப்பக்கம் வளைந்திருக்கிறது. சில படங்களிலும் கோவில்களிலும் துதிக்கை வலப்பக்கம் வளைந்திருப்பதையும் காண்கிறோம். இவ்விதம் இரு வேறு விதங்களில் துதிக்கை வளைந்திருப்பது ஏன்?

**பதில்:** விநாயகரின் இடப் பக்கம் வளைந்த துதிக்கை தீய சக்திகளையும் பகையையும் விரட்டு





டிருந்த கேள்விக்கும் உரிய பதில் மேலே இடம் பெற்றுள்ளது.)

டி. ராதாகிருஷ்ணன், ராஜா அண்ணாமலைபுரம்

**கேள்வி:** 'ரிதம் வதிஷ்யாமி, ஸத்யம் வதிஷ்யாமி' என்று உபநிஷத மந்திரம் கூறுகிறது. ரிதம், சத்தியம் ஆகிய இரண்டிற்கும் பொருள் ஒன்றுதானே? அவ்விதம் இருக்கும் போது இரண்டையும் சேர்த்து உபநிஷதம் சொல்ல வேண்டிய காரணம் என்ன?

**பதில்:** ரிதம் என்பது விவகார உண்மையைக் குறிக்கிறது. உதாரணமாக, சூரியன் உதிக்கிறான், அஸ்தமிக்கிறான் என்று சொல்கிறோம். இது விவகாரத்தில் காணப்படும் (Relative or apparant reality) உண்மை. இங்கு, உபநிஷத மந்திரத்தில் சத்தியம் என்பது பாரமார்த்திக உண்மையைக் குறிக்கிறது. உதாரணமாக, சூரியன் ஒருபோதும் உதிப்பதுமில்லை, அஸ்தமிப்பதுமில்லை. எனவே இங்கே சத்தியம் என்பது என்றென்றும் நித்தியமாய் உள்ள (Absolute reality) உண்மையை உணர்த்துகிறது.

சி. விஜயகுமார், சென்னை-41

**கேள்வி:** கடவுளைக் கோவிலுக்குச் சென்று வழிபடுவது சிறந்ததா? அல்லது வீட்டிலேயே விக்கிரகத்தை (படத்தை) வைத்துப் பூஜை செய்து வழிபடுவது நல்லதா?

**பதில்:** பல நூற்றாண்டுகளாகப் பல பெரியோர்கள் வழிபட்ட க்ஷேத்திரங்களிலும் ஆலயங்களிலும் தெய்வ சாந்நித்தியம் அதிகமாக இருக்கும். அது நம்மை எளிதில் ஆட்கொள்ளும்.

வசதி உள்ளபோதெல்லாம் கோவிலுக்குப் போவதுடன் வீட்டிலும் பூஜை, ஜபம், தியானம் ஆகியவற்றைச் செய்வது நல்லது. வீட்டையும் கோவிலாக்கிவிட வேண்டும்.

கோவில் அருகில் இல்லாத நிலையில் வீட்டில் பூஜை மட்டும் போதும்.



# ஊழ்வினை

அலங்காரம் தேவராஜன்

ஊழ் என்ற சொல்லிற்குத் தெய்வம், விதி என்று பொருள் கூறும் நிகண்டு.

நல்வினை, தீவினைகளின் பலன், செய்தவனையே சென்று அடைகிறது. இதையே ஊழ்வினை என்று ஆன்றோர் கூறுவர்.

ஒருவரது வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் வருவது கண்கூடு. இதைக் காணும்போது நல்வினை, தீவினை என்ற இரண்டு உண்டு என்பது பெறப்படுகிறது.

நல்வினை தீவினை என்றிரு வகையாற்
சொல்லப் பட்ட கருவினுள் தோன்றி
வினைப்பயன் விளையுங் காலை உயிர்கட்கு
மனப்பே ரின்பமும் கவலையும் காட்டும்

என்ற மணிமேகலை அடிகளால், நல்வினையும் தீவினையும் கருவிலேயே ஒருவனைச் சேர்ந்து, அதன் பயன் விளையும் காலத்தில் உயிர்களுக்கு இன்பத்தையும் துன்பத்தையும் கொடுக்கும் என்று தெரிகிறது. இதிலிருந்து நல்வினையினால் இன்பமும், தீவினையினால் துன்பமும் விளைகின்றன என்று தெளிவாகிறது. இதனால் ஒருவன் ஒரு பிறப்பில் செய்த நல்வினை தீவினையின் பலன்களை மறுபிறவியில் அடைகிறான் என்று விளங்குகிறது.

இவ்வாறு ஒருவரைத் தொடர்ந்து வரும் வினையின் பலன்களை ஊழ்வினையின் பலன் என்று கூறுகிறோம்.

'பசுக்கூட்டத்தின் மத்தியில் சிறு கன்று ஒன்றைச் செலுத்தினால், அது தன் தாயைத் தேடி அடைந்துவிடுகிறது. அதுபோல ஒருவன் முற்பிறப்பில் செய்த கர்மத்தின் பலனும் செய்தவனைச் சென்று அடைகிறது' என்று நாலடியார் கூறுகிறது. இதிலிருந்து, வினைப் பலன்கள் செய்தவனைத் தேடி வந்தடைகின்றன என்று உணர்கிறோம்.

'இந்த ஊழ்வினைப் பலன்கள் செய்தவனைத் தாமே சென்றடையுமா?' என்றால், அவ்வாறு சொல்வதற்கில்லை. வினைப் பலன்கள் அறிவற்றவை, அவை ஒருவரைத் தாமே சென்றடையா. அவ்வாறாயின், இந்த இருவினையைச் செய்தவன் இந்த வினைப் பலன்களைத் தானே ஏற்று அனுபவிக்கிறான் என்று கொள்ள வேண்டும். அவ்வாறு கொள்வோமேயானால், தனக்கு விருப்பமான நல்வினைப் பலனான இன்பத்தை மட்டும் ஏற்றுக் கொண்டு தீவினைப் பலனான துன்பத்தை அவன் ஒதுக்கிவிடலாம் அல்லவா? எனவே, வினைகளைச் செய்தவன் தானே அவற்றின் பலன்களை அடைகிறான் என்பது பொருந்தாது.

கோவலன் மாதவியோடு இன்புற்று நல்வினைப் பலனை அனுபவித்தான். நல்வினைப் பலன் முடியும்வரை அவன் மாதவியோடு இன்புற்றான். நல்வினை நடையைக் கட்டிவிட்டது. தீவினை தன் பலனைக் கொடுக்கும் காலம் வந்தது. கோவலன் கண்ணகியின் வீட்டுக்குத் திரும்பினான். மாதவிக்குக் கொடுக்கத் தன்னிடம் பொருள் கேட்கவே அவன் வருவதாக எண்ணினாள் கண்ணகி. கைப் பொருள் இழந்த கணவனிடம் அவள் தன் காற்சிலம்பைக் கொடுக்கிறாள். சிலம்பை விற்று, இழந்த செல்வத்தை





ஈட்ட நினைக்கிறான் கோவலன். அந்த நினைவே காரணமாக அவன் கண்ணகியையும் உடன்கொண்டு அன்றிரவே மதுரைக்குப் புறப்படுகிறான். இதை, 'தீவினையின் ஏவலால் கோவலன் மதுரைக்குப் புறப்பட்டான்' என்கிறார் இளங்கோவடிகள்.

இதிலிருந்து, வினைப் பலன்களும் ஒரு குறிப்பிட்ட காலம்வரை நின்று அழியக் கூடியனவே எனக் காண்கிறோம். இதைக் கொண்டு பார்க்கும்போது, வினை தன் பலனை ஒருவனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கிறது என்பது பொருந்தாது அல்லவா? பின், ஊழ்வினை எவ்வாறு ஒருவனைப் பற்றி வருகிறது என்று ஆராய்வோமேயானால், ஒருவனது நல்வினை தீவினைகளுக்கு ஏற்பத் தெய்வத்தால் உண்டாவதே ஊழ்வினையாகும். இதையே நம் முன்னோர் 'தெய்வ சங்கல்பம்' என்பர்.

தெய்வத்தின் எண்ணத்தினால் நிகழ்ப்படுவதனால் ஊழுக்குத் தெய்வம் என்றும், தெய்வத்தால் விதிக்கப்படுவதனால் விதி என்றும் பெயர். இதுபற்றியே தெய்வம், விதி என்று நிகண்டு பொருள் கூறுகிறது.

''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினும் தான் முந்துறும்'' என்பது குறள். 'ஊழ்வினை போல மிக்க வலிமையுடையது எது இருக்கிறது?' என்று கேட்கிறார் திருவள்ளுவர்.

இலக்கியப் பெருஞ் செல்வமான இராமாயணத்தில், தசரத மன்னன் இராகவனுக்கு முடிசூட்ட விழைகிறான். கைகேயி, பரதன் நாடாளவும் இராமன் காடேகவும் மன்னனிடம் வரம் வேண்டுகிறாள். வேந்தனும் வேதனை மிகுந்த நிலையில் அவள் வேண்டியபடியே நடக்கிறான். இந்தச் செயல் இலட்சுமணனுக்கு எட்டியது. ''மூத்தவன் இருக்க இளையவனுக்குப் பட்டமா? இதென்ன முறை கேடு! முதல் நாள் இராமனுக்கு முடிசூட எண்ணி மறுநாள் பரதன் முடிசூடுவான் என்ற மன்னனின் மதிகேட்டைச் சொல்வதா? என்றோ கேட்க வேண்டிய வரத்தை இன்று கேட்கும் கைகேயியின் பேதை அறிவைக் கூறுவதா? அல்லது தாயின் மூலம் அரசைப் பெற்று ஆளப் போகும் பரதனின் புத்தியைப் புகல்வதா? இதென்ன மதிகேடு! எல்லோருக்கும் மூத்தவனான இராமன் இருக்க இளையவனான பரதன் முடிசூட்டிக்கொள்வதா? இதற்கு ஒருநாளும் நான் இசையேன்'' என்று சீறுகிறான்.

கோபத்தினால் அவனது உள்ளம் கொதிக்கிறது; கண்கள் கனலைக் கக்குகின்றன. அவனது சொற்களில் தீப் பொறி தெறிக்கிறது. ''இதோ, இப்பொழுதே சென்று முறை தவறிய மன்னனை முடித்து இராமனுக்கு முடி சூட்டுகிறேன். இதற்கு இடையூறாக மண்ணுலகத்தோரும் விண்ணுலகத்தோரும் ஒருங்கே திரண்டு வந்தாலும் அனைவரையும் ஒழித்துக் கட்டுவேன்'' என்று வீராவேசத்தோடு நிற்கும் இலட்சுமணனைக் காண்கிறான் இராமன்.



முறுவல் பூத்த முகத்தோடு அவன் முன்னே வந்து நின்ற இராமன், ''இலட்சுமணா! என்றுமே நீதி தவறாத உன் புத்தி இன்று ஏன் நிலைதடுமாறுகிறது? மன்னனிடம் என்ன குறை கண்டாய்? நம் சிற்றன்னைக்குக் கொடுத்த



வரத்தை மாற்றி அரசனைப் பொய்யனாக்க முயல்கிறாயா? தந்தையின் பணியைத் தலைமேற்கொள்வதல்லவா தனயனுக்கு அறம்? நான் வனம் செல்வது ஊழ்வினையின் பயனேயாகும். விதியின் சதியே இது. விதியினால் ஆட்டப்பட்ட தந்தையார் முதலியோரிடத்தில் யாதும் குற்றமில்லை. ஊழ்வினைப் பயனை அனுபவித்தே தீர வேண்டும். ஊழைக் கோபிக்க முடியுமா? அப்படி ஊழை வெகுள்வது தண்டிக்கப்பட்டவன் சட்டத்தின்மீது கோபிப்பது போலாகும். அன்றியும் விதியை வெல்லுதல் எவ்வளவு வலிமையுடையோர்க்கும் இயலாது. எனவே நீ கோபிப்பதனால் யாது பயன்?'' என்கிறான்.

நதியின் பிழையன்று நறும்புன
லின்மை யற்றே
பதியின் பிழையன்று பயந்து
நமைப்பு ரந்தாள்
மதியின் பிழை யன்று மகன்பிழை
யன்று மைந்த
விதியின் பிழைநீயிதற் கென்னை
வெகுண்ட தென்றான்

என்று கம்பர், 'விதி' என்ற சொல்லை வைத்து, தெய்வத்தின் அவதாரமாகிய இராமன் வாயிலாக விதியின் வலிமையை விளக்குகிறார்.

இந்த இடத்தில் ஒரு கேள்வி எழுகிறது- 'திருமாலின் அவதாரம் இராமன். தெய்வத்தின் அவதாரமாகிய இராமனுக்கு விதி எவ்வாறு வந்தது?' என்பது. இதை ஆராயும்போது, தேவர்களின் வேண்டுகோளுக்கு இசைந்து இராவண வதம் செய்வதுதானே திருமாலின் எண்ணம்? தன் சங்கல்பத்தை நிறைவேற்றவே திருமால் இராமனாகப் பிறந்தான். இதைக் கொண்டு பார்க்கும் போதும், விதி, தெய்வம், ஊழ் என்பவை யாவும் தெய்வத்தின் சங்கல்பம் (எண்ணம்) என்பது உறுதிப்படுகிறது.

இதுவரை காட்டிய சான்றுகளிலிருந்து, ஊழ்வினை 'என்பது தெய்வத்தால் உண்டாவது என்பது தெளிவாகிறது. இந்த இரு வினைகளையும் மாற்றத் தெய்வத்தையே பற்ற வேண்டும்.' அப்படிப் பற்றுவதற்கு அவனிடம் நாம் ஒவ்வொருவரும் சரணாகதி செய்வது ஒன்றே வழி,

★

அத்வைத ஞானம் அடைவது அரிதுதான். எனினும் இறைவன் திருவடியில் உண்மையான பக்தி உண்டாகிவிட்டால், அஞ்ஞானத்தை அழித்து விளக்கம் உண்டாக்கும் இறைவனின் திருவருள் உதவி வந்து சேரும். அது காரணமாக அடைவதற்கு அரிய அத்வைத ஞானம் மிகச் சுலபமாகக் கிட்டிவிடும்.

—குருவாசகக் கோவை

சிறுவர் பகுதி

# பண்பும் பதவியும்

- த. காவேரி

தேவர்களின் தலைவன் இந்திரன். அவன் பல வகையான கடுந் தவங்கள் செய்து இந்திரப் பதவியில் அமர்ந்து மூன்று உலகங்களையும் யாவரும் மகிழ ஆட்சி செய்து வந்தான்.

ஒரு நாள் வழக்கம் போல் தேவசபை கூடியிருந்தது. அப்போது தேஜஸ் பொருந்திய ஓர் அசுர மன்னன் சபையில் நுழைந்தான். எல்லாத் தேவர்களும் அவனிடம் ஈர்க்கப்பட்டவர்களாக எழுந்து மரியாதை செய்தனர்.

இதைக் கண்ட தேவேந்திரன் தன்னிடம் ஏதோ குறை இருக்கிறது என்று கருதிச் சபையை விட்டு நழுவிவிட்டான். தேவர்கள் தங்கள் தலைவனைக் காணுமல் கவலைப்பட்டார்கள்.

அப்போது அசுர மன்னன் அவர்களைத் தேற்றி, "கவலைப் படாதீர்கள். நான் பதவியேற்று மூன்று உலகங்களையும் ஆட்சி செய்கிறேன்" என்று சொல்லி, தேவேந்திரனின் ஆசனத்தில் சென்று அமர்ந்தான்.

சில நாட்கள் சென்றன. மானபங்கமடைந்த தேவேந்திரன் ஒரு பிராம்மண இளைஞனின் வடிவத்தில் அசுர மன்னனிடம் வந்தான். அசுர மன்னனிடம் திகழ்ந்த தெய்விக ஒளிக்கு உரிய காரணத்தை இந்திரன் அறிந்துகொள்ள விரும்பினுன். எனவே அவன் அசுர மன்னனிடம் தன்னைச் சீடனுக ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினுன். மன்னனும் அந்த இளைஞனைத் தன் சீடனுக ஏற்றுக்கொண்டான்.

இளைஞன் எப்போதும் குருவிற்குச் சேவை செய்யத் தயாராக இருந்தான். அவனது பணிவும் உழைப்பும் சேவையும் அசுர மன்னனைப் பெரிதும் மகிழ்வித்தன. அவன் பலவகை ஞானங்களையும் இளைஞனுக்குப் போதித்தான்.

ஒரு நாள் இளைஞன், "தாங்கள் மூன்று உலகங்களையும் ஆட்சி செய்யும் திறமையை எவ்விதம் பெற்றீர்கள்?" என்று குருவை வினவினுன்.

அசுர மன்னன், "எனது குரு சுக்கிராசாரியார். அவரது அறிவுரைகளைப் பின்பற்றியே நான் எப்போதும் நடந்துகொள்கிறேன். என் விருப்பத்திற்கு மாறுனதை அவர் கூறினுலும், அதை அவர் என் நன்மைக்காகச் சொல்வதாகவே ஏற்றுக்கொள்கிறேன். அது குரு பக்தி, புலனடக்கம், மனஅடக்கம் ஆகியவற்றை எனக்குத் தந்துள்ளது. ஒழுக்கத்தின் பயனுக நற்பண்புகள் மலர்ந்தன. அது காரணமாகப் பணமும் பதவியும் என்னைத் தேடி வந்துள்ளன" என்றுன்.

அசுர மன்னனின் பதிலிலிருந்து, 'நன்னடத்தையும் ஒழுக்கமுமே

எல்லா நலன்களையும் தர வல்லவை' என்பதை இந்திரன் தெளிவாக உணர்ந்துகொண்டான்.

ஒரு நாள் அசுர மன்னன், "சீடனே, உனது பணிவும் அன்புச் சேவையும் என்னை மகிழ்வுறச் செய்கின்றன. உனக்கு ஒரு வரம் தர விரும்புகிறேன். உனக்கு வேண்டியதைக் கேள்'' என்று இளைஞனிடம் கூறினான்.

அசுர மன்னன், 'இவ்வளவு பண்பட்டுள்ள ஒரு பிராம்மணன் என்ன பெரிதாகக் கேட்டுவிடப் போகிறான்!' என்று நினைத்துக் கொண்டிருந்தபோதே அந்த இளைஞன், "தாங்கள் ஏதாவது வரம் தர விரும்பும் பட்சத்தில் தங்கள் நன்னடத்தையை எனக்குத் தாருங்கள்'' என்றான்.

பசுக்களுக்கோ பொன் பொருளுக்கோ அற்ப ஆசை கொள்ளாமல், நற்பண்புகளுக்கு ஆசைப்பட்ட சீடனைக் கண்டு மகிழ்ந்து "தந்தேன்'' என்றான் அசுர மன்னன்.

உடனே அவனது உள்ளுணர்வு, 'இந்த இளைஞன் சாதாரண ஆளாக இருக்க முடியாது. வேறு யாரோ ஒருவன் இந்த வடிவத்தில் வந்திருக்கிறான்' என்று உணர்த்தியது. அவன் தனது பேரிழப்பை உணர்ந்து சோர்ந்து போய் அமர்ந்துவிட்டான். அப்போது அவனது உடலிலிருந்து ஒளிமயமான தேவதைகள் ஒருவர் பின் ஒருவராக வெளி



யேறிச் செல்லத் துவங்கினர். அவர்களை நோக்கி, "நீங்கள் யார்?" என்று கேட்டான் அசுர மன்னன்.

முதல் தேவதை, "நான் உன்னுடைய அப்பழுக்கற்ற நன்னடத்தை. இப்போது பிராம்மணனைத் தேடிப் போகிறேன்" என்று கூறியது. இரண்டாவது தேவதை, "நான் நேர்மை. எங்கு நன்னடத்தை இருக்கிறதோ அங்கு நானும் இருப்பேன்" என்று சொல்லிக் கொண்டே நன்னடத்தையைப் பின்பற்றிச் சென்றது. மூன்றாவது தேவதை, "நான் சத்தியம். இதுவரையிலும் நீ கவனமாகப் பாதுகாத்து வந்த நன்னடத்தை இந்திரனுக்கு உரியதாக ஆகிவிட்டது. எனவே இப்போது நேர்மையைப் பின்பற்றிச் செல்கிறேன்" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டது. நான்காவது தேவதை, "நான்தான் நற்செய்கை. சத்தியம் இல்லாத இடத்தில் நான் இருப்பதற்கில்லை" எனக் கூறிச் சென்றுவிட்டது. அடுத்துத் தோன்றிய ஐந்தாவது தேவதை, "நான்தான் சக்தி. நற்செயல்களைப் பின்பற்றிச் செல்கிறேன்" என்றது. அடுத்து வந்த தேவதை, "நான்தான் செழிப்பு. சக்தி இல்லாத இடத்தில் செழுமை இருக்க முடியாது. சக்தி, நற்செயலைச் சார்ந்திருக்கிறது. நற்செயல், பிராம்மணனை நாடிச் செல்வதனால் நாங்களும் அதையே பின்பற்றுகிறோம்" என்று கூறியது.

அசுர மன்னன், "தேவதைகளே, நீங்கள் போவதற்கு முன்பு அந்தப் பிராம்மணன் யார் என்பதைச் சொல்லுங்கள்" என்றான்.

தேவதைகள், "அவன் தேவேந்திரன். மூன்று உலகங்களையும் வெல்லும் ஆற்றல் நன்னடத்தைக்குத்தான் உண்டு. இந்த உண்மையை உன் மூலம் அறிந்த அவன் அதையே உன்னிடமிருந்து வரமாகக் கேட்டுப் பெற்றான். இதுவரையிலும் நீ கவனமாகப் பாதுகாத்து வந்த நன்னடத்தை இந்திரனுக்கு உரியதாக ஆகிவிட்டது. எனவே இப்போது நேர்மை, சத்தியம், நற்செயல், சக்தி, செல்வம் ஆகியவை அவனுக்கு உரியவையே" என்று சொல்லிவிட்டுத் தேவேந்திரனை நாடிப் புறப்பட்டன. தேவதைகள் அகன்றதும் அசுர மன்னன் கீழே விழுந்தான்.

குருபக்தி, நன்னடத்தை, நேர்மை, சத்தியம், நற்செயல், சக்தி, செழுமை போன்றவற்றைப் பெற்ற தேவேந்திரன் பூரண தேஜஸுடன் தேவசபையில் நுழைந்து சிம்மாசனத்தில் அமர்ந்தான். அவனது தெய்விக ஒளி தேவர்களுக்கு மகிழ்ச்சி தந்தது.

எவர் பொருட்டாகிலுமோ, அசிரத்தையினாலோ அசுரமன்னனைப் போன்று நன்னடத்தையைக் கைவிடக் கூடாது. நன்னடத்தையைக் கண்ணிமை போல எப்போதும் மிகமிகக் கவனமாகப் பாதுகாக்க வேண்டும்.

நல்லொழுக்கங்களை எப்பாடு பட்டாகிலும் நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும். அவற்றை எந்த நிலையிலும் நாம் இழக்கச் சம்மதிக்கக் கூடாது. 'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' என்பது வள்ளுவர் வாக்கு.





# நீலமயிலேறும் முருகன்

- சி. வி. சிவராமகிருஷ்ணன்

பேரழகுப் பெட்டகம் குமரன். அவனது திருப்பெயரைப் புல்லரிக்கும் மேனியோடும், பூரிக்கும் மனதோடும் நாமணக்கச் சொல்லி நற்கதி பெற்ற பக்தர்கள் ஏராளம்.

குன்றிருக்கும் இடந்தோறும் குடியிருந்து குறிஞ்சிக் கடவுளென்று பெயர் பூண்டு, 'குகா' என்று பாடுபவரின் மனக் குகையில் இருப்புச் செய்து, குணமெனும் மணத்தினை மனமெனும் தலத்தில் நிறைத்து, பாலிக்கும் பாலனின் பாட்டில், நாமத்தில், தம்மைப் பறிகொடுத்து, 'ஓம் சரவணபவாய நம:', 'வீரவேல் வெற்றிவேல்' என்று முழங்கித் தம்மை மறந்து, தம்மில் குமரனையும், குமரனில் தம்மையும் கண்டு, அத்வைதானுபூதியில் ஊறிய சிவச் செம்மல்கள் எத்தனையோ பேர்.

படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூவகை வினைகளுக்கும் மூலமாகி நிற்பவன் யாரோ அந்தப் பரம்பொருளே முருகன் என்பது, அனுபூதிமான்களின் அசைக்க முடியாத நம்பிக்கை.

'குமரன் பிரணவஸ்வரூபி' என்பது மறைகளின் முடிவு. சதுர்முகனின் செருக்கு அடங்க, வேத சாரமாகிய பிரணவத்தின் பொருளை உபதேசித்து, தந்தைக்கும் போதகனாய் நின்ற குமரன், பிரணவத்தை உபதேசித்ததன் வாயிலாகத் தன்னையே விளக்கி நின்றான் என்பது ஆன்றோர் வாக்கு.

அகார உகார மகாரங்களின் தொடர்பு அறுபடாத நாதப் பிணைப்பே ஓங்கார ஒலி. படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலுக்கும் உரிய மூன்று கடவுளரில், 'அ'காரத்தில் விஷ்ணுவும், 'உ'காரத்தில் மகேச்வரனும், 'ம'காரத்தில் பிரம்மாவும் உறைகின்றனர் என்று மறைமொழி கூறுகிறது.

ஓம் என்ற பிரணவ வடிவே குமரன் என்பதனால், அகார உகார மகாரங்களில் உறையும் விஷ்ணு, சிவன், பிரம்மா என்ற மும்மூர்த்திகளும் குமரனில் குறுகிக் கரைகின்றனர் என்பர் பெரியோர்.

எனவே, 'முருகா!' என்று முழுமனதோடு சிந்தித்தால், 'குமரா!' என்ற குரல் தழுதழுக்கக் கண்ணீர் மல்கிக் கூவினால், மும்மூர்த்திகளையும் வழிபட்டதாகவே ஆகும்.

'பிரணவரூபமான சுப்பிரமணியனே சிவம்; சிவமே சுப்பிரமணியம்' என்று சிவமந்திரம் குறிப்பிடுகிறது.

இதனை முக்கண்முதல்வனே தன் முழுமுதல்தேவியான பார்வதிக்குச் சொன்னதாக ஸ்காந்தம் பேசுகிறது. இந்தக் கருத்தை, 'ஈசானஸ் ஸர்வவித்யாநாம் ஈச்வரஸ் ஸர்வபூதாநாம்' என்ற சிவ மந்திரம் தெளிவுபடுத்துகிறது.

குமரனின் திருப்பெயரும், பஜிப்போர்க்கு மந்திரமும் ஆன 'ஸுப்ரஹ்மண்யோம், ஸுப்ரஹ்மண்யோம், ஸுப்







ரஹ்மண்யோம்' என்ற அரிய நாமம் ஓம் என்ற பிரணவத்தில் நிறைவுறுகிறது; இது, 'முருகன் திருப்பெயரே பிரணவம்' என்பதை உணர்த்துகிறது.

'சத்ரூந் சோஷயதி இதி ஸ்கந்த:—சத்துருக்களை வற்றச் செய்பவன் ஸ்கந்தன்' என்கிறது நிகண்டு.

சூரனின் உரம் கிழித்து, அவன் கொண்ட மயில், மற்றும் சேவல் வடிவங்களைத் தன்னிடம் தாங்கி அவனைக் கொல்லாமல், வலிமையை வற்றச் செய்து அருளியவர் குமரவேள்.

'கலௌ ஸ்கந்த: ப்ரகீர்த்தித:—கலியில் கண்கண்ட தெய்வம் கந்தனே' என்பது பெரியோர் வாக்கு.

'ஸ்கந்தஸ்ய கீர்த்திம் அதுலாம் கலிகல்மஷநாசிநீம்—காரிருளை வெய்யோனின் ஒளிக்கீற்று எளிதில் அகற்றுவது போல், கந்தவேளின் புகழ்ச் சிறப்பு ஒன்றே கலியில் வரும் பாவங்களைப் போக்க வல்லது' என்பது அனுபவ வாக்கியம்.

'பிறப்பற்ற பரம்பொருளே, எழிலொழுகும் மேனியொடு, ஏற்பார்க்கு இரங்கி அருளும் கனிவொடு, ஒளியே உடல்தாங்கிக் குமரனுக வந்தது' என்று கச்சியப்பர் கூறுகிருர்.



உலகம் கனவிலும் எண்ணிப் பார்த்திராத சாதனைகள் பிரார்த்தனையால் செய்து முடிக்கப்படுகின்றன.

கடவுளை நோக்கித் தன் பொருட்டும் தன்னைச் சார்ந்தவர் பொருட்டும் கைகூப்பாத ஒரு மனிதன் ஆட்டையும் மாட்டையும் விட எந்த விதத்தில் உயர்ந்தவன்?

—டெனிஸன்

உருவற்றது, உருக் கொண்டும் திகழ்வது, முதலும் முடிவுமற்றது, ஒன்ருகிப் பலவாகி விளங்குவது எதுவோ அதுவே பிரம்மம். அந்தப் பிரம்மமே, 'அருவமும் உருவமுமாகி அனுதியாய்ப் பலவாய் ஒன்ருய்ப் பிரம்மமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகி' என்று குமரனின் தோற்றத்தைக் கச்சியப்பர் வர்ணிக்கிருர்.

சத்யோஜாதம், வாமதேவம், தத்புருஷம், ஈசானம், அகோரம் என்ற ஈசனின் பஞ்ச முகங்களோடு, அதோமுகம் ஒன்றும் ஆக ஆறு முகங்களும் தோற்றுவித்த ஒளிப்பிழம்பில் உருக்கொண்ட உத்தமன் முருகனை, 'யாமே குமரன்! குமரனே யாம்' என்று பேசி ஈசனே பெருமை செய்த பெம்மான் சுப்பிரமணியன்.

தீயாலும் வளியாலும் ஏற்க இயலாத ஆற்றலோடு, பனியாறு கங்கையையும் வற்றச் செய்யும் வெம்மையோடு புறப்பட்ட அந்தச் சுடர்ப்பந்துகள் சரவணப் பொய்கையில் கங்கையால் சேர்க்கப்பட்டு, அன்பர்களின் ஆராத துயர் துடைக்கும் ஆறுமுகமாகத் திகழ்ந்தன.

கங்கையில் ஏந்திச் செல்லப்பட்டுச் சரவணப் பொய்கையில் சேர்ந்ததனுல் அந்தச் சுடர்வடிவு 'காங்கேயன்' எனப் பெயர் கொண்டது.

சரவணத்தில் உருக் கொண்ட அந்தச் சண்முகனுக்குப் பாலூட்டித் தாலாட்டிச் சீராட்டும் சிறப்புப்பெற்ற கார்த்திகைப் பெண்டிரின் புண்ணியத்தை, அந்த வாத்ஸல்ய பக்தியை விரித்துச் சொல்ல, ஒரு பெரும் பக்தர் வர வேண்டும். ஒன்று நிற்க, ஒன்று நெளிய, ஒன்று அழ, ஒன்று புன்னகைக்க, ஒன்று கண்சிமிட்ட, ஒன்று தழுவ, இடையினின்று ஒன்று நழுவ, ஒன்று கண்பனிக்க, ஒன்று ஓட, ஒன்று ஒளிய, ஒன்றேயான பரம்பொருள் குமரன் இப்படிக் குன்றாத எழிலோடு கோல விளையாட்டுக் காட்டிய அந்தச் சுந்தரக் காட்சியை அனுபவித்த கார்த்திகைமாதரின் கரைகாணா அன்புக்கும் புண்ணியத்திற்கும் ஈடு இணையுண்டா?

அன்னை பார்வதியால் தாய்மையுணர்வு மீதூர அணைக்கப்பட்டு, ஆறு உருவங்களும் ஒருருவமாகி, 'ஸ்கந்தன்' என்ற நாமம் பெற்ற கட்டற்ற கந்தன், அந்தப் பெயர் சொல்பவரின் கட்டறுத்துக் காப்பான்.

மேலான பிரம்மம் என்ற பொருள் பட, சுப்பிரமணியமாக நாமம் பெற்றுச் சுடர்ந்த ஒண்பொருளே கந்தன்.

வேல் என்றால் குமரனின் தாளும், குமரனின் திருத்தாள் என்றால் அவன் சுடர்வேலும் அன்பர்க்கு அருகிருந்து காக்கும்.

'வீர வேல், வெற்றி வேல்' என்று கோஷம் எழுப்பும்போது, உணர்வு மங்கித் தளர்ந்து சூம்பிப்போன ஜீவன் கூடச் சுருக்கென எழுந்து சுப்பிரமணியன் துதி பாடும்.

நெஞ்சக் கன கல்லு நெகிழ்ந்துருகத் தஞ்சம் தரும் சண்முகனுக்கு செஞ்சொற் புனைமாலை புனைந்து வழிபட்ட அருணகிரிநாதரின் அனுபூதியும் அலங்காரமும் காண்பார்க்கு ஆறுமுகனின் அமுதூறும் கருணையை அறிமுகப்படுத்துவன.

சஷ்டி கவசம் பாராயணம் செய்து சத்திய வேட்கையுற்றுச் சண்முகனை உள்ளத்தில் இருத்தி, சுகம் பல பெற்றுச் 'சுப்பிரமணியா!' என்று கண்ணீர் உகுத்துக் கரைந்து உருகுவோர் ஏராளம்.

'ஏறுமயிலேறி விளையாடும் ஏந்தல், ஈசரொடு ஞானமொழி பேசிய அண்ணல், குகா! குமரா! என்று கூவிக் கூவிப் பாடுவோரின் குறைதீர்க்கும் வள்ளல், குன்றினைக் கிழித்துப் புறப்பட்ட சக்திவேல் தாங்கிய ஷண்முகச் செம்மல், பகைப் புலம் வந்து மாறுபட்ட சூரன் முதலிய அவுணரை வதைத்த வடிவேலன், அந்தக் குன்றிமணி நிறத்தவனான குமரனைப் பாடு நெஞ்சே!' எனப் பாடிக் களித்துப் பயன் துய்த்த சான்றோர் நம்மையும் குமரனின் குவளைமலர்ப் பாதம் பற்ற ஆற்றுப் படுத்துவர்.

ஈ எறும்பு முதல் அனைத்துமாய் விளங்கும் அன்னை பராசக்தியே குமரனின் கைவேலாகக் காட்சி தருகிறாள்.

அந்த மூலவளே, வேலவனின் திருக் கரத்தில் விளங்கும் வேல் என்றால், அதன் கோலத்தை வார்த்தைகளைக் கொட்டி விளக்க முடியுமா?

அந்த வேல், குன்றின் நெஞ்சு பக எறிந்த அம்சுடர் நெடுவேல், அது குறைகளைந்து, குணம் பெய்து, குறையாத ஆனந்தத்தைக் குன்றாகக் கொடுக்கும் காமதேனு. எனவே, தனி வேலே தலைமைச் சிறப்பினை ஏற்றுப் போற்றப் படுகிறது.

ஆயுதங்களில் குமரனின் தனி வேலும், நாரணனின் சுடர்த் திகிரியாம் சுதர்சனமும் தனிச் சிறப்போடு வழிபடப் படுகின்றன.



வேல் சக்தி; மயில் பிரணவம்; சேவல் 'கொக்கறக்கோ' என்று கூவிக் கூவிக் குமரனை வழிபடும் பாங்கினை எடுத்துச் சொல்லும் போதகன். குமரனோடு தொடர்புடைய அனைத்துமே குண மூட்டும் என்பது அனுபூதிமான்களின் அருள்வாக்கு.

நீலமயிலேறி விளையாடும் கோலக் குமரனை மனக் குகையில் இருத்தி வினைப் பயன் கழித்து வீடுற விழைவோமாக!



# விஷ்ணு புராணம் சொல்லுகிறது

## திரட்டும் தமிழும்: 'அண்ணா' சுப்ரமண்யம்



1. மிகுந்த துன்பத்திற்கு உறைவிடமாகிய இந்தப் பிறவிக் கடலில் உங்களுக்கு ஓர் உண்மையைச் சொல்லுகிறேன். விஷ்ணு ஒருவர் தாம் நாடி அடைய வேண்டியவர்.

2. அறிவில்லாதவர்கள சிறு வயதில் விளையாட்டில் ஈடுபட்டவர்களாகவும், யௌவனத்தில் சிற்றின்பத்தை நாடுபவர்களாகவும், முதுமையில் வலிமையிழந்தவர்களாகவும் காலத்தைக் கழிக்கிறார்கள்.

3. ஆகையால், விவேகமுள்ளவன் சிறுவயதிலேயே உயர்வற உயர் நலமுள்ள இறைவனை அடைய முயல வேண்டும். பால்யம், யௌவனம், கிழத்தனம் முதலிய உடல் நிலைகளில் பற்றுக் கொள்ளக் கூடாது.

4. செயலாலோ மனதாலோ வாக்காலோ பிறருக்கு எவன் துன்பத்தை விளைவிக்கிறானோ, அந்தத் துன்பம் விதை போலிருந்து அவனுக்குப் பின்பு அளவு கடந்த கெடுதலை முளைக்கச் செய்கிறது.

5. பகவான் விஷ்ணு உங்களிடம் இருக்கிறார். அவர் என்னிடம் இருக்கிறார். மற்ற இடங்களிலும் இருக்கிறார். ஆதலால் இவன் என் நண்பன், இவன் எனக்குப் பகைவன் என்று வேறாகக் கருதப்படுகிறவனும் விஷ்ணுவே.

6. தேவர்கள், மனிதர்கள், மிருகங்கள், பறவைகள், பாம்புகள், மரங்கள் ஆகியவையெல்லாம் அனந்தனாகிய விஷ்ணுவின் வடிவங்களே; வேறுபட்டவை போல் இருக்கின்றன.

7. ஆண்டவனே! ஆயிரக்கணக்கான பிறவிகளில் நான் எந்த எந்தப் பிறவியை எடுக்க நேர்ந்தாலும், அச்சுதா! அவ்வவற்றில் நழுவாத பக்தி உன்னிடம் எனக்கு இருக்க வேண்டும்.

8. பாவம் செய்த பின்பு எவனுக்கு அதைப்பற்றி மனவருத்தம் ஏற்படுகிறதோ, அவனுக்குச் சிறப்பான ஒரே பிராயச்சித்தம் ஹரி ஸ்மரணை. (பகவானை நினைப்பது, அவரது திருநாமத்தை ஜபிப்பது.)

9. விஷ்ணுதான் பரப்பிரம்மம். அவரிடமிருந்துதான் இந்த உலகம் தோன்றுகிறது. அவரேதான் இந்த உலகம். அவரிடமே இந்த உலகம் நிலைபெற்று அவரிடமே ஒடுங்குகிறது.

10. எல்லா உடல்களிலும் குடிகொண்டிருக்கும் புருஷன்(தெய்வம்) ஒருவனாகவே இருக்கும்போது, 'நான் இப்படிப்பட்டவன், நீங்கள் யார்?' என்ற வார்த்தை பயனற்றதேயாகும்.



11. இந்த உலகிலோ, பிற உலகிலோ இருந்தவையும் இருப்பவையும் இருக்கப் போகிறவையுமான எல்லாப் பொருள்களும் பகவானிடமிருந்தே தோன்றியவை.

12. கலியின் தோஷத்தால் எவனது மனம் தூய்மையை இழந்து கலங்கவில்லேயோ, எவன் தன் மனதில் ஜனார்த்தனனை எப்பொழுதும் வைத்தவனே, அவனே ஹரியின் சிறந்த பக்தன் என்று தெரிந்து கொள்வாயாக.

13. எவன் பிறர் பொருளை அபகரிக்கிருனே, உயிர்களை வதைக்கிருனே, அந்தப் பாவத்தில் பிறந்த துர்மதம் பிடித்த, புத்திகெட்ட மனிதனின் இதயத்தில் பகவான் அனந்தன் இருக்கமாட்டான்.

14. பிறரை நிந்தித்தல், கோள் சொல்லுதல், பொய் பேசுதல் ஆகிய வற்றை எவன் தவிர்க்கிருனே அவனிடம் ஹரி சந்தோஷமடைகிருர்.

15. பிறர் பொருளைச் சிறிதும் கவரக்கூடாது. பிரியமில்லாத பேச்சைச் சிறிதும் பேசக்கூடாது. பிரியமான பொய்யையும் பேசக் கூடாது. பிறர் குற்றங் குறைகளைப் பற்றியும் பேசக்கூடாது.

16. வரவுக்கு மீறிச் செலவு செய்பவர், பிறரை நிந்திப்பதில் பற்றுள்ளவர், துஷ்டர் ஆகியோருடன் அறிவாளி நட்புக் கொள்ளக் கூடாது. தனியாக நெடுவழி போகக்கூடாது.

17. அறிவாளி உத்தமர்களை எப்பொழுதும் பகைத்துக் கொள்ளக் கூடாது. அதர்மர்களையும் பகைத்துக் கொள்ளக்கூடாது. திருமணமும் விவாதமும் சமமான குணம் படைத்தவர்களுடன்தான் பொருந்தும்.

18. குருவின் முன்னிலையில் பணியில்லாமல் உயர்ந்த ஆசனத்தில் அமரக்கூடாது. கோவில் நாற்சந்தி ஆகியவற்றை அப்பிரதக்ஷிணமாகச் சுற்றக்கூடாது.

19. எந்த மனிதர்கள் பற்றற்றவர்களாய், காமம் கோபம் லோபம் ஆகியவற்றுக்கு வசப்படாதவர்களாய், நல்லொழுக்கத்தில் நிலை பெற்றவர்களாய் இருக்கிருர்களோ அவர்களுடைய மகிமையால்தான் பூமி தாங்கப்படுகிறது.

20. இகத்திலும் பரத்திலும் உயிர்களுக்கு எது உபகாரமாக இருக்குமோ, அதையே அறிவாளி வாக்காலும் மனதாலும் செயலாலும் எப்போதும் பின்பற்ற வேண்டும்.

21. யதிகளுக்குப் பற்றின்மை தான் முக்திக்கு வழி வகுப்பது. பற்றினல், யோகாரூடனும்கூடக் கீழே வீழ்த்தப்படுகிருன். அற்ப சித்தியுடைய போகியைப்பற்றிக் கேட்பானேன்?

அருள்நெறிக் கதை



# அரசனும் கணையாழியும்

ஒரு சமயம் பாரசீக தேசத்தில் ஓர் அரசன் ஆண்டு வந்தான்.

அவன் அணிந்திருந்த கணையாழியில் 'இதுவும் அழிந்துவிடும்' என்ற சூத்திரம் (சொற்கள்) நன்கு பொறிக்கப்பட்டிருந் தன. எந்த நிலையிலும் இந்தச் சூத்திரம் அவன் கண்ணில் படும். அவன் அதைப் பார்த்து ஆறுதலடைவது வழக்கம்.

அவனது கஜானாவில் நவரத்தினங் களும் முத்து வகைகளும் வந்து குவிந்து கொண்டிருந்தன.

ஒரு நாள் அரசன் தனது கஜானா இருந்த இடத்திற்குச் சென்றான். அங்கிருந்த முத்துக்களையும் வைடூரியங்களை யும் அவன் பார்த்து மகிழ்ச்சி அடைந்து கொண்டிருந்தபோது, மோதிரத்தின் சூத்திரம் அவன் கண்ணில் பளிச்சென்று பட்டது. அதைப் பார்த்ததும், 'இந்தச் செல்வமும் ஒரு நாள் அழிந்துவிடும்' என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் தோன்றியது. அது காரணமாக அவன் மனம் அமைதியும் சமத்துவமும் பெற்றது.



ஒரு நாள் ஆஸ்தான மண்டபத்தில் பிரபுக்கள் சூழ அரசன் சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தான். அங்கே பழ வகையும் மதுவும் நிறைந்திருந்தன. பிரபுக்கள் அரசனது பெருமைகளை எடுத்துச் சொல்லிக் கரகோஷம் செய்தனர். அனைவரும் அரசனின் புகழைப் பாடிக் கொண்டிருந்த சமயத்தில் சூத்திரம் அரசன் கண்ணில் பட்டது. அரசன், ''அன்பர்களே! இன்பம் வரும்; ஆனால் நிலைத்திருப்பதற்கல்ல. புகழ் உச்சாணி யில் இருக்கும் என்னுடைய நிலையும் மாறலாம்'' என்று கூறி மனச்சாந்தி அடைந்தான்.

அரசன் ஓர் அழகியை மணந்தான். அவள் அந்த நாட்டிற்கே ராணியானாள். அவளுடன் படுக்கையறையில் கூடிக் களித்திருந்தான், அப்போது சூத்திரம் கண்ணில் பட்டது. அரசன், 'ஆகா! இவளைவிட அழகு வாய்ந்த பெண்ணை எந்த அரசனும் அணைத்திருக்கமாட் டான், ஆயினும் அழியும் மாமிசம் மண்ணே. இதுவும் அழிந்துபடும்' என்று எண்ணி மோகம் நீங்கினான்.

ஒரு சமயம் அரசன் யுத்தகளம் சென்றான். கடும்போரில் அவன் மீது ஈட்டி பாய்ந்துவிட்டது. வீரர்கள் அவனைக் கூடாரத்திற்கு எடுத்துச் சென்றனர். வலி தாங்க முடியாமல் அவன் புலம்பினான். அப்போது இந்தச் சூத்திரம் அவன் கண்ணில் பட்டது. 'வலியோ தாங்க முடியவில்லை. பொறுமை கொண்டால் நாளடைவில் இதுவும் போய் விடும்' என்று ஆறுதல் கொண்டான்.

போர்க்களத்தில் அவன் பெற்ற வெற்றியைக் கொண்டாட மக்கள் ஒரு மைதான மத்தியில் உயர்ந்த மேடை மேல் நன்கு அமைந்த அரசனின் பெரிய உருவக் கற்சிலை ஒன்றை எழுப்பினர்.

ஒரு நாள் அரசன் மாறுவேடம் பூண்டு மைதானத்திற்குச் சென்று தன் பொருட்டு எழுப்பியிருந்த சிலையைக் கண்டு களித்தான். அப்போது கணையாழியில் இருந்த சூத்திரம் பளிச்சென அவன் கண்ணில் பட்டது. அது காரணமாக, 'புகழ் என்றால் என்ன? அதுவும் மெதுவாக மறையக்கூடியதே!' என்று தன்னடக்கம் கொண்டான்.



இரும்பு, மரம், சணல் இவற்றினாலான பிணைப்பை, சான்றோர் உறுதியான தளை என்று கருதுவதில்லை. நகை, ரத்தினம், மனைவி, மக்கள் ஆகியனவே, பலம் வாய்ந்த தளை என்று அவர்கள் கூறுகின்றனர்.

வெள்ளியிலுள்ள களிம்பைத் தட்டான் அகற்றுவது போல, அறிஞன் தன்னிடமுள்ள மாசுகளைச் சிறிது சிறிதாக அகற்ற முயலவேண்டும்.

அடக்கம் இன்றி ஒழுக்கம் கெட்டு, நூறு ஆண்டுகள் வாழ்வதைக் காட்டிலும், தியானம் செய்து, ஒழுக்கத்துடன் ஒரு நாளில் வாழ்ந்தவனுடைய வாழ்வு சிறப்புடையது. —புத்தர்





அரசன் கிழவன் ஆனான், நோய் வாய்ப்பட்டான். பாயும் படுக்கையு மானான். மரணம் நெருங்குவதை உணர்ந்தான். ஆனால் சாவு என்பது என்ன என்று சிந்தித்தான். இந்தச் சமயத்திலும் கணையாழியின் சூத்திரம் அவன் கண்ணில் பட்டது. 'இந்த உடலும் அழிந்துபடும்' என்று தைரியம் கொண்டான். மன நிம்மதியுடன் மரணத்தை எதிர்நோக்கலானான். மரணமும் வந்தது. இவ்விதம் அவன் வாழ்க்கை நாடகம் முற்றுப்பெற்றது.

செல்வம், புகழ், மனைவி, கீர்த்தி, அழியாச் சிலை, மரணம் ஆகியவை அரசனை வலுவில் தாமாக வந்தடைந்தன. எனினும் அத்தகைய நேரங்களிலும் அவன் மனவேறுபாடு கொள்ளாமல் 'எல்லாம் அழியக்கூடியவையே' என்று திடசித்தம் கொண்டு சாந்தி பெற்றான். இதற்கெல்லாம் காரணமாக இருந்தது அவன் மோதிரத்தில் இருந்த பொன் மொழியே ஆகும்.

அந்தப் பொன்மொழி இன்ப துன்பம் நேர்ந்த காலங்களில் அரசன் மன விகாரம் கொள்ளாமலிருக்கத் தூண்டியது. அதற்குக் காரணம், 'எல்லாம் அழிந்து படும்' என்ற திட வைராக்கியமே.

வைராக்கியம் உள்ளவனுக்கே பிரம்மசரியம் சித்திக்கும்.

பிரம்மசரியம் உள்ளவனுக்கே வைராக்கியம் சித்திக்கும். அத்தகையவனுக்கே உரியது ஆத்ம சாட்சாத்காரம்.

அழியாத ஆன்மா ஒன்றே; அதுவே எல்லாமுமாக விளங்கிக்கொண்டிருக்கிறது.

* * *

நாம் மேலே பார்த்த கதை ரிஷிகேஷ், சுவாமி சிவானந்தர் எழுதிய 'பிரம்மசரியத்தின் ரகசியங்கள்' என்ற நூலில் இடம் பெற்றுள்ளது.

துன்பங்களாகிய கருவிகளின் மூலம் இறைவன் நம்மை மேலான காரியங்களுக்காகத் தயார் செய்கிறான். —பீச்சர்

பலவீனமான ஆத்மாக்கள் மற்றவர்களால் மாற்றப்படுகின்றன. ஆன்ம பலம் உள்ளவர்கள் மற்றவர்களை மாற்றிவிடுகிறார்கள். —ஒரு பக்தர்

விதிப்படிதான் பயணம். வீணே ஏன் சஞ்சலம்? —ஒரு சாது

சுவர்க்கத்திற்கு மலர்கள் தூவிய பாதை இருக்கிறது. ஆனால் அதில் யாரும் நடப்பதே இல்லை. நரகத்திற்கு வாசலே இல்லை. ஆனால் அதில் பலர் சுவர் ஏறிக் குதிக்கிறார்கள்! —சீனா

மல்லிகைக் கொடி வாடிய மலர்களை உதிர்த்துவிடுகிறது. அது போலவே மனிதர்கள் காமத்தையும் பகைமையையும் முற்றும் உதிர்த்து விட வேண்டும். —ஒரு மகான்

இறைவனின் கோபத்தை எடை போடலாம். ஆனால் அவனது அருளுக்கு அளவே இல்லை. —இங்கிலாந்து

உலகம் கனவிலும் எண்ணிப் பார்த்திராத சாதனைகள் பிரார்த்தனையால் செய்து முடிக்கப்படுகின்றன.

கடவுளை நோக்கித் தன் பொருட்டும் தன்னைச் சார்ந்தவர் பொருட்டும் கைகூப்பாத ஒரு மனிதன் ஆட்டையும் மாட்டையும் விட எந்த விதத்தில் உயர்ந்தவன்? —டெனிஸன்







# ஞாலம் விளங்க இருந்த நாயகன்

கி.வா.ஜகந்நாதன்

நீலஉருவிற் குயிலே நீள்மணி மாடம்நிலாவும்
கோல அழகில் திகழும் கொடிமங்கை
உள்ளுறை கோயில்
சீலம் பெரிதும் இனிய திருஉத்தரகோச
மங்கை
ஞாலம் விளங்க இருந்த நாயகனை வரக்
கூவாய்.

நீலமாகிய அழகிய உருவத்தையுடைய குயிலே, தேர்ந்த மாணிக்கக் கற்கள் பதித்த மாடங்கள் விளங்குகின்ற திருக்கோயில் அது. பல வகையான கோலங்களுடனும் அழகோடும் விளங்குகின்ற கொடி போன்ற உமாதேவியாரோடு சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற தலம் உத்தரகோசமங்கை.




அங்குள்ள திருக்கோயிலில் அவன் எழுந்தருளியிருக்கிறன். அவன் எளிமை மிகவும் உடையவன், இனியவன். இந்த உலகம் எல்லாம் நன்கு விளங்கும்படியாக அந்த நாயகன் அங்கே எழுந்தருளியிருக்கிறன். அவனை இங்கே வரும்படியாகக் கூவுவாயாக.

நீலம் என்பது கறுப்பைக் குறிக்கிறது. ''நீலநிறக் காக்கைதன்னைப் பேசுவிக்கலாமோ?'' என்பது ஒரு பழம் பாடல். நீள் மணி மாடம்—உயர்ந்திருக்கின்ற மாணிக்கங்கள் பதித்த மாடம். திகழும்—அங்கே எழுந்தருளியிருக்கும். கோலம்—பலவகையான அணிகளைப் பூண்ட திருக்கோலம். அழகு இயற்கையாக அமைந்தது.

கொடி மங்கை—கொடியைப் போன்ற உமாதேவியார். சீலம்—அடியார்களுக்கு மிக்க எளியராம் தன்மை. பெரிதும், இனிய என்பது நாயகனேடு தனித் தனியே கூட்டி மிகப் பெரியவன், இனியவன் என்க.

திரு உத்தரகோசமங்கை பாண்டி நாட்டில் உள்ளது.

எம்பெருமான் இந்த உலகத்தைக் காப்பதற்காக அங்கங்கே திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கிறன். அதனல், 'ஞாலம் விளங்க இருந்த நாயகன்' என்றர். 'அவன் வந்து திருவருள் செய்யும்படியாகக் கூவுவாயாக' என்கிறர் மாணிக்கவாசகர்.



# ஆன்மிக வாழ்க்கை ஒரு புனித யாத்திரை

## சுவாமி யதீச்வரானந்தர்

ஆன்மிக வாழ்க்கையே உலகில் சிறந்த வாழ்க்கையாகும். இந்த வாழ்க்கையில் இடையூறுகளும் பல இருக்கின்றன.

சுயநலமும் லௌகிகமும் மனிதனைப் பந்தப்படுத்தக் கூடியவை. அத்தகைய உலக வாழ்க்கையைப் புறக்கணித்துத் தியானமும் பிரார்த்தனையும் ஒருவனிடம் மேலோங்குகின்றன என்று வைத்துக் கொள்வோம். அத்தகையவனுக்குத் தெய்வத்தினிடமிருந்து பெறப்படும் சாந்தமும் மனநிறைவும் லட்சியமாக அமைகின்றன.

ஆரம்ப நிலையில் ஜபம், தியானம், தவம் ஆகியவை அனைத்தும் மகிழ்ச்சிகரமாக இருந்து வரும். ஆனல் நாளாக ஆக வெளியில் ஏற்படும் இன்னல்கள், தனக்குள் ஏற்படும் இன்னல்கள் தவிர்க்க முடியாதவை.

மனதை உள்முகமாகத் தியானநிலையில் நிறுத்தும்பொழுது அதன் ஸ்தூல நிலையில் வராத பகுதியை நாம் கிளறி விடுகிறோம். இவ்விதம் சூட்சுமமாக மறைந்திருப்பனவற்றை நாம் தாக்க முயல்வதை நம் மனம் சாதாரணமாக விரும்புவதில்லை; எதிர்க்கிறது. இந்த உள்ளூறத் தோன்றிய எதிர்ப்பு, புறநிலையிலும் பிரதிபலிக்கிறது. அந்த நிலையில் ஆன்மிகச் சாதனையை நிறுத்திவிடலாமா என்ற எண்ணமே தோன்ற ஆரம்பிக்கும்.




சில சமயங்களில் உடலும் மனதின் பக்கம் சேர்ந்து எதிர்க்கத் துவங்கும். பழைய ஆசைகளும் நினைவுகளும் வலிமை பெற்று உடலில் பிரதிபலிக்கும். இந்த நிலை விளையாட்டுப் போட்டியில் 'தடை ஓட்டம் (obstacle race)' போன்றது. இது எல்லாச் சாதகர்களுக்கும் ஏற்படுகிற ஒரு நிலைதான்.

சோம்பல், தூக்கம், சஞ்சலம், புலனின்பம் போன்றவை ஒரு வகையில் ஏற்படும் இன்னல்கள். அது தவிர, உடல் நோய்க்கு உட்படுவது, சந்தேகம், உற்சாகக் குறைவு, தியானநிலை கைகூடாமல் போவது போன்ற தடங்கல்களும் ஏற்படலாம்.

இவற்றை நாம் நன்கு கவனித்துப் பார்த்தால் எல்லாவற்றிற்கும் நாமே காரணம் என்ற உண்மை புலப்படும். ஆன்மிகச் சாதனையின் விளைவாகச் சில ஆன்ம அனுபவங்கள், ஒளிநிலைகள் விரைவிலோ நாளடைவிலோ ஏற்படும். இதைக் கொண்டு தன் மனம் பரிசுத்த நிலையைப் பெற்றுவிட்டது என்ற முடிவுக்கு ஒரு சாதகன் வரக்கூடாது. மனதின் மூலை முடுக்குகளில் சில குப்பைகளும் கூளங்களும் இருந்து வரும். இவற்றையும் அப்புறப்படுத்த முயல வேண்டும். ஒரேயடியாக மனதின் போக்குகளை மாற்றுவது சரியான முறையல்ல. இதில் நிதானம் தேவை.

அளவுக்கு மீறிய உணவு, அதிகத் தூக்கம், அர்த்தமற்ற செயல்கள், அர்த்தமற்ற எண்ணங்கள், அதிகப் பேச்சு ஆகிய ஒழுங்கற்ற பழக்கங்கள் சாதகர்களுக்கு ஏற்றவையல்ல. மனதின் தூய்மைநிலை மிகவும் அவசியம். அதைக் கெடுக்கும் எந்த வித எண்ணங்களையும் அதற்கு அளிக்கக் கூடாது.

இது போலவே நல்ல பயனை விளைவிக்கக்கூடிய, உயரிய ஆவல்களை அடக்கி வைப்பதும் கூடாது. மனிதாபிமானத்துடன் கூடிய அன்பு, நட்பு, தயை போன்ற மனோபாவனைகளை ஆத்மசாதனையின் பெயரால் அசட்டை செய்யக் கூடாது. தேவையான படிப்பு, தெய்விகச் சங்கீதம், சமூகத் தொண்டு ஆகியவை மனதின் போக்கை உயர்ந்த நிலையில் நிறுத்துகின்றன. அவற்றை அகற்றத் தேவையில்லை. தியானம் ஒன்றே போதும் என்று நினைக்கக் கூடாது.

அளவுக்கு மீறிய, சக்திக்கு மீறிய தியானம் முதலிய ஆத்மசாதனங்களை மேற்கொள்வதும் இன்னல் விளைவிக்கும். உடல், மனம் ஆகியவற்றின் சக்திகளின் திறனை மீறிச் சாதனை பழகுவதற்குப் போதிய அளவிற்குப் பிராணசக்தி இருந்தாக வேண்டும். அந்தச் சக்தியைப் பொறுத்தே ஆத்மசாதனைகள் அமையும்.

மேலும், ஆத்மசாதனை என்பதில் பல பிரிவுகளும் இருக்கின்றன. சாதகன் அவற்றில் பல பிரிவுகளையும் ஒரே சமயத்தில் மேற்கொள்வதும் நல்லதல்ல. தியானத்துடன் பிராணாயாமம், தவம், யோகாசனம் போன்ற பிரிவுகள் எல்லாவற்றையும் ஒருங்கே மேற்கொள்வது சரியல்ல. நரம்புத் தளர்ச்சியுள்ளவர்கள், மன உளைச்சல் உள்ளவர்கள் இந்த விஷயத்தைக் கவனத்தில் கொள்ள வேண்டும். தனது ஆற்றல், இயல்பு ஆகியவற்றை உணர்ந்து, அதற்கு ஏற்ற பளுவைச் சுமத்த வேண்டும். நீண்ட நேரம் தியானம் செய்வதற்கு, குளிர்ந்த மனோபாவனை அவசியம். மூளையில் உஷ்ணநிலை ஏற்படாத வகையில் பார்த்துக்கொள்ள வேண்டும்.


ஸ்வாமி யதீச்வரானந்தர்

சாதனையில் ஓரளவு முன்னேறிய சாதகர்கள், சில சமயம் உள்ளத்தில் உற்சாகம் இல்லாதவர்களாகவோ, சூனிய நிலை பெற்றவர்களாகவோ உணர்வர். தியானம் செய்வதில் இருந்த ஆர்வம் திடீரென்று குறைந்துவிடும். ஆகாய வெளியில் மிதப்பது போல உணர்வர். தியானநிலைக் காட்சி மிகவும் விஸ்தாரமாக ஏற்பட்டால் இத்தகைய சூனிய நிலை உணர்வு வரும். இது போன்ற சமயங்களில் அந்தரங்க ஆன்மா எப்போதும் பகவானுடன் தொடர்பு கொண்டுதான் இருக்கிறது என்ற எண்ணத்தில் நம்பிக்கை ஏற்படுத்திக்கொள்வது நல்லது. சிறிது ஜபத்தில் ஈடுபட்டால் இந்த இரண்டு நிலைகளும் மாறிவிடும்.

ஆத்மசாதனையில் ஈடுபடுபவன், தனது உள்ளத்தைப் பசி, களைப்பு முதலிய கீழ்த்தர உடல் கேந்திரங்களிலிருந்து அகற்றி இதயம், சிரஸ் ஆகிய உயரிய நிலைக்குக் கொண்டு வருகிறான். ஆனால், அந்த உயர்ந்த நிலையில் மனதை நிலைநிறுத்துவது ஸ்திரமாக இராது. இதனால் அவன் மனக்கவலை கொள்ள நேரும். இவ்விதம் ஸ்திரமற்ற நிலை ஏற்படுவது சகஜம் என்று உணர்ந்து கவலைப்படாமல் இருக்க வேண்டும். ஆன்மிகச் சாதனையில் முன்னேற்றம் காண்பது என்பது, வழுக்கு மரத்தில் ஏறுவது போன்றது.

இவ்விதம் ஆன்மிக வாழ்க்கையில் பலவித இன்னல்கள் இருப்பதைப் பார்த்தோம். இவற்றின் தாற்காலிகத் தொல்லைகளைப் பொறுத்துக்கொள்ள நாம் பழக வேண்டும். நாம் ஆன்மிக உணர்வுகளில் மூழ்கும்போது உள்ளத்தின் ஆழத்தில் புதைந்துள்ள தூசுகள்





## அச்வமேத யாக பலன் தருபவை

பரம ஏழைக்கு அளிக்கும் தானம், பூஜை நின்றுபோன கோயிலுக்குப் பூஜை ஏற்படுத்துதல், அநாதைப் பிணத்திற்கு விதிப்படி ஸம்ஸ்காரம் (தகனம் செய்வித்தல்) ஆகிய மூன்றும் அச்வமேத யாக பலனைத் தருபவை ஆகும்.

வாழ்வது முக்கியமல்ல; சிறப்பாக வாழ வேண்டும். —சாக்ரட்டீஸ்

தன்னிடமிருந்து தன்னை ஆற்றிக்கொள்ள வல்லவனுக்கு எவனால் துன்பம் இழைக்க முடியும்?

—தாவோ மதம்



கிளம்பத்தான் செய்யும். பல நாள் மூடிக் கிடந்த அறையைப் பெருக்குவது போன்றது இது. இதன் போக்கைக் கண்டு மனமுடைந்து ஆத்மசாதனையைக் கைவிடக்கூடாது. மேலும் விடாப்பிடியுடன் ஆன்மிக வாழ்வில் தொடர்ந்து செயல் புரிய வேண்டும்.

யோகசாதனையில் யமம், நியமம் ஆகிய இரண்டும் முதல் இரண்டு படிகளாகத் திகழ்கின்றன. இவற்றைக் கைக்கொள்ளாமல் ஒரேயடியாக மூன்றுவது படிக்குத் தாண்டுவது சரியல்ல. யமம், நியமம் ஆகிய இரண்டும்தான் ஆன்மிக வாழ்க்கைக்குத் தேவையான உடல்வலிமையையும் மனவலிமையையும் தருகின்றன. ஆரம்பநிலைக் கோளாறுகளை (பாலாரிஷ்ட நிலைகளை) வெற்றிகரமாகச் சமாளித்தால் நல்ல நாள் பிறக்கும். கட்டுக்கு அடங்காத உள்ளுணர்ச்சிகள், கனவு காணும் போக்குகள், மனோமய சுதந்திரப் போக்குகள், தாறுமாறான சிந்தனைகள், பழைய பழக்கங்கள் ஆகிய நிலைகளைத் தாண்டிய பிறகுதான் நடு நிலை, சாந்த நிலை, சமத்துவ நிலை சித்திக்கும்.

''நான் என் குருதேவருடன் ஆறு வருஷகாலம் ஆன்மிகச் சாதனை சம்பந்தமாகச் சண்டை போட்டேன். அதன் பாதையில் ஒவ்வோர் அங்குலத்தையும் தெரிந்துகொள்வதற்காகவே இவ்வாறு செய்தேன்'' என்று சுவாமி விவேகானந்தர் ஒரு சமயம் குறிப்பிட்டார். ஆன்ம சாதனையில், தான் யாதுமறியாத பச்சிளங் குழந்தையே என்ற மனநிலையில் ஜகன்மாதாவின் பராமரிப்பைப் பெற வேண்டும்.

ஆத்மசாதனை என்பது சாதாரண உடற் பயிற்சியல்ல. ஆன்மநிலையை உயர்த்த வேண்டும் என்ற தணியாத ஆர்வத்துடன் அதாவது அருள்தாகத்துடன் சாதனையில் இடையறாமல் ஈடுபட வேண்டும்.

சிலர் இதயத்திலும், சிலர் புருவமத்தியிலும் தியானம் செய்வதைச் சாதனையாகக் கொண்டிருப்பார்கள். இந்தக் கேந்திர ஸ்தானத்தை ஒரு சாதகன் எப்போதும் தன் அடைக்கல ஸ்தலமாக்கிக் கொள்ள வேண்டும். ஆசையின் இழுப்பு, தீய எண்ணங்களின் துடிப்பு, புற உலகத் தொந்தரவுகள் போன்ற எது வந்தாலும் இந்தக் கேந்திரநிலைக்கு ஓடிப் போய்விடு. உன்னால் இயன்ற வரை அங்கேயே ஸ்திரமாக இருக்க முயற்சி செய். 'ஆன்மா சுயஞ் சோதியுடன் கூடிய சத் பொருள். அது மனதிற்கும் உடலுக்கும் அப்பாற்பட்டது' என்ற எண்ணம் உன்னிடம் நிலைத்திருக்கட்டும். இதற்குச் சாதகமாக, தினசரி தியானம் முடிந்த பிறகு ஆத்ம சொரூபம் பற்றிய உபநிஷத வாக்கியங்கள் போன்றவற்றைச் சில நிமிஷங்கள் படிப்பதை வழக்கமாக வைத்துக்கொள்.

தியானம் போன்ற சாதனை இருமுனைப் போராட்டமாக விளங்குகிறது. 'நான் உடல் அல்ல, நான் ஆன்மாதான்' என்ற இரண்டு எதிர்நிலைக் கருத்துக்கள் இதில் அடங்கியுள்ளன. இந்த ஆன்மிக வாழ்க்கை ஒரு நீண்ட நெடிய யாத்திரையாக விளங்குகிறது; கைலாயகிரி யாத்திரை போன்றது இது. உடலுக்குத் தேவையான உணவுப் பொருள் மூட்டை

யைக் காலி செய்துவிட்டு ஆன்மதரிசனப் பிரசாதத்தை மட்டும் பெற்றுக்கொண்டு திரும்பும் யாத்திரை. இந்த யாத்திரையில் நாம் நமது பலவீன நிலைகளிடம் கவனம் செலுத்திவர வேண்டும்.

நம்பிக்கை இழக்கும்படியான சந்தர்ப்பங்கள் இடையிடையே தோன்றும். அப்போது நிதானத்தை மேற்கொண்டு, உலகக் கடமையையும் விடாமல், ஆத்ம சாதனையையும் விடாமல் செய்து வர வேண்டும். தெய்வத்தின் அருளை நாடியவர்களாகவே செயல் புரிய வேண்டும்.

ஒவ்வொரு நாளும், நிதானமாக, இடைவெளி ஏற்படாமல் சாதனை தொடரட்டும். உற்சாகமில்லாவிட்டாலும் சாதனை தொடரட்டும். உன்னிடம் ஆன்மிகசக்தியின் ஓட்டம் தடைப்படாமல் இருக்கட்டும். திடசங்கல்பம் இதற்கு வழி காட்டும். தடங்கல்கள் யாவும் நமது திட சங்கல்பத்தைச் சோதிப்பதற்கு வருபவையே. அவற்றைச் சமாளிக்கச் சமாளிக்க, நம்மிடம் மனஉறுதி வலிமை பெறும்.

சாதகனுக்கு எப்போதும் ஆண்டவன் அருள் உண்டு. நாம் அதை அறியாவிட்டாலும் அது செயற்பட்டுக்கொண்டே இருக்கிறது. தியானம் செய்ய முடியாத நிலை வந்தால் அப்போது பிரார்த்தனையில் ஈடுபடு. இதுவும் சாதனைதான். இவை போன்ற ஆன்மிகச் சாதனைகள் மலை போன்ற கஷ்டங்களையும் கரைந்து போகும்படி செய்துவிடும். நாம் கடவுளை நோக்கி ஓர் அடி எடுத்து வைத்தால் போதும்; அவர் நம்மை நோக்கிப் பத்து அடி எடுத்து வைப்பார். இது அவர் இயல்பு.

மனம் தளராமல், வந்ததை வந்தபோது சந்திக்க முயற்சி செய். 'வருவதெல்லாம் ஆண்டவன் இச்சைப்படியே வருவது' என்ற மனப்பான்மையுடன் அவற்றை எதிர்கொள். அப்போது உன் மனக் குழப்பம் நீங்கிவிடும். இது போன்ற சமயங்களில் நாமஜபம் என்ற சாதனை உன்னிடம் இடம் பெறட்டும்.



விசிறியை அசைக்காமல் காற்று வருவதில்லை. உழைக்காமல் நல்ல கல்வியறிவு பெற முடிவதில்லை.

—கவி விருந்தா

பிறப்பும் குடும்பமும், வாழ்வதும் சாவதும், இறந்து மீண்டும் பிறந்து சாவதும், மாயை, மாயை! மாயையை இன்னது என்று உள்ளது உள்ளபடி உணர்பவன் மோட்சம் அடைகிறான். —ஒரு மகான்

அறிவும் ஒழுக்கமும் வாழ்க்கை என்ற வண்டியின் இரண்டு சக்கரங்கள். —ஜப்பான்

**பணம்**

பணம், அடித்தளம் தெரியாத ஒரு கடல். அந்தக் கடலில் கௌரவம், மனச்சாட்சி, உண்மை ஆகியவையெல்லாம் மூழ்கிவிடுகின்றன.

—ஸாமர்ஸெட் மாம்



ஜபத்தின் இடையே ஏற்படும் மாற்று எண்ணங்களை ஏற்காமல் முன்னேறிச் செல். இத்தகைய ஜபத்தில் குறுக்கிடும் எண்ணங்களைப்பற்றிப் பிறகு நினைத்துப் பார். இவை நம்மைப்பற்றிய நல்ல அறிவை அளிக்கும்.

'நான் கடவுளின் பக்தன். நான் ஆன்மிகப் பாதையில் செல்ல விரும்புகிறேன். ஆகவே எனக்கு மனஉறுதியற்ற நிலை ஏற்படுவது சரியல்ல' என்று பொறுமையாக உனக்கு நீயே சொல்லிக்கொள். இதில் தவறு இல்லை. மனஉறுதியற்ற நிலை ஏற்பட்டால், தனிமையைத் தேடாதே. நல்ல நண்பர்களை நாடி, மனத் தளர்ச்சி என்ற நிலையை மாற்றிக்கொள்.

தியானம், பிரார்த்தனை, நாமஜபம் ஆகிய இவற்றில் சமயத்துக்கு ஏற்றபடி எதையேனும் கைக்கொண்டு வெற்றிப் பாதையில் தொடர்ந்து நடைபோடுவாயாக.



